# மேகவாகடத்திரட்டு




தஞ்சாவூர் மகாராசா சரபோசியின்

**சரசுவதி மகால் நூலகம்**

**தஞ்சாவூர்.**

சரசுவதி மகால் நூலக வெளியீட்டு எண். 453

# மேகவாகடத்திரட்டு

சிறப்புக்கௌரவப் பதிப்பாசிரியர் :
டாக்டர். **ச. அரங்கராசன்,** பி. ஐ. எம்.,
மாவட்ட சித்தமருத்துவ அலுவலர்,
கும்பகோணம்.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
**சரசுவதி மகால் நூலகம்,**
தஞ்சாவூர்.

2002] [ விலை : ரூ. 50 - 00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | மேகவாகடத்திரட்டு |
| பதிப்பாசிரியர் | : | டாக்டர். ச. அரங்கராசன், பி. ஐ. எம்., |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் நூலகம் |
| வெளியீட்டு எண். | : | 453 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| வெளியீடு | : | டிசம்பர், 2002 |
| தாள் | : | TNPL 17.8kg. |
| நூல் அளவு | : | 21 செ. மீ X 14 செ.மீ. |
| பக்கங்கள் | : | 170 |
| படிகள் | : | 1000 |
| எழுத்து | : | 12 புள்ளிகள் |
| அச்சிட்டோர் | : | ஒளி அச்சுக்கோப்பு மற்றும் ஒளி அச்சு, சரசுவதி மகால் நூலகம் |
| புத்தகக்கட்டு | : | மெலிந்த அட்டை |
| பொருள் | : | சித்தமருத்துவம் |
| விலை | : | ரூ.50 - 00 |

# வெளியீட்டாளர் முகவுரை

தஞ்சையில் அமைந்து தரணிக்கெல்லாம் அறிவொளியை அளித்து வரும் அரியகலைவிளக்கமாகச் சரசுவதி மகால் நூலகம் திகழ்ந்து வருகின்றது. இந்நூலகம் பன்மொழிச் சுவடிகளையும், நூல்களையும் தன்னகத்தே கொண்டு இந்திய மொழிகளின் ஒருமைப்பாட்டு நிறுவனமாகவும் ஒளிவீசித் திகழ்கின்றது.

மேலும், தமிழ் இலக்கியச்சுவடிகளின்கருவூலமாகமட்டுமின்றி தமிழ்ச்சித்த மருத்துவச்சுவடிகளின்களஞ்சியமாகவும்விளங்குகின்றது இந்நூலகம். இங்கே இடம்பெற்றுள்ள சித்த மருத்துவச் சுவடிகளைத் தக்க வல்லுநர்களைக் கொண்டு நூல்களாகப் பதிப்பித்து வெளியிடும் பணியினையும் தொடர்ந்து ஆற்றிவருகின்றது.

இந்நிறுவனத்தின் நூல் வெளியீட்டு வரிசையில் மற்றுமொரு குறிப்பிடத்தகுந்த சித்த மருத்துவ நூலாகத்தற்பொழுது 'மேகவாகடத்திரட்டு' என்னும் இந்நூல் வெளியிடப்படுகின்றது.இந்நூலில் பால்வினை நோய்கள் பலவற்றையும்எடுத்துக்கூறப்பட்டுள்ளது.

மேலும் அவற்றின் கூறுகள் விவரிக்கப்பட்டுள்ளன. மேக நோயின் இயல்புகளைக் கண்டறியும் வழிகளாக மனத்தால் அறிதல், நிறத்தால் அறிதல் என்பன விளக்கப்படுகின்றன. இந்நூலைச் சுவடியிலிருந்து பதிப்பு நுட்பங்களை மாவட்ட

சித்த மருத்துவ அலுவலர் டாக்டர். ச. அரங்கராசன் அவர்கள் பதிப்பித்து அளித்துள்ளார். அவருக்கு என் பாராட்டுக்கள்.

இந்நூலை வெளியிட பொருளுதவி நல்கும் நடுவண் அரசுக்கு என் நன்றி உரித்தாகும்.

இந்நூல் சிறப்பாக வெளிவர ஆவன செய்த நூலக நிருவாக அலுவலர் திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும், நூலகர் மற்றும் வெளியீட்டு மேலாளர் திரு. அ. பஞ்சநாதன் அவர்களுக்கும், ஒளி அச்சு முறையில் (காப்பி பிரிண்டரில்) அச்சுப் பணி செய்தஊழியருக்கும், ஏனையோர்க்கும் எமது பாராட்டுக்கள்.

தஞ்சாவூர்,
19.02.2003.

**சி. கோசலராமன்,** இ.ஆ.ப.
மாவட்ட ஆட்சியர்
மற்றும்
இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

# PREFACE

Mehavakatam and Mehagunavakatam are the titles of two rare palm-leave manuscripts (Nos. 648 and 127) available in the Sarasvati Mahal Library, Thanjavur. There are 33 stanzas in Mehavakatam, 107 in Mehagunavakatam and 31 in Vaidhya attavanai. All types of medicines administered for the cure of sexually transmitted diseases are explained in the vaidhya attavani. These palm-leaf manuscripts have not been so far edited and published which are unique of their kind and not available in any other library.

The pathology and diagnostic features of the disease known as "Meham" are described and explained in full details in these texts. Two types of "Mehams" viz., 1. Madhumeham, (diabetes) and 2. Pirameham (sexually transmitted diseases) are recognised in the Siddha system of medicines.

Diabetes was known to siddha practitioners long before the discovery of sexually transmitted diseases and it was referred to in Tamil Literature and epigraphic inscriptions. An inscription at Kadathoor in Coimbatore District describes the sufferings because of Megam by a Government Officer Vickramachola Thribuvana Singadevan. The sexually transmitted diseases were spread in India, especially South India by the sailers of the West, who visited India, after the discovery of the sea route by Vascode Gama in 1460.

The STD was named as Pirameham (other meham) or Pramiya meham just to distinguish it from diabetes the Madhumeham (sweet meham). Diabetes was named as "Neerizhivu" at a later period. In the Poet Kasim's Thiruppugazh, mention had been made about piramegam and it was described as a sexually transmitted disease. Siddha texts mentioning STD can easily be recognised as a work done after the 14th century. Most

of the books referring to STD were written in the 15th century. Both diabetes and STD are treated under the same category of disease because both are diagnosed by the examination of fluids from the genital organs. But the diabetes is caused by the malfunctioning of the islets of Langerhans of the pancreas and the STD are caused by the pathogenic micro organisms. The two have nothing in common. Theraiyar had written a siddha text "Neerkuri-Neikuri" (diagnosis with the half of watery and semifluids) and this book which has seen many editions, mentions the urethral diseases like strictures, stones etc., and describes the curative methods.

Aids is a sexually transmitted disease which spreads fast in the developing and under developed countries. The systems of this disease resemble that of Piramehams. When one studies the Piramehams, he comes across almost all the symptoms of Aids. The symptoms and the curative medicines of Piramehams had been clearly explained in the siddha texts "Agastiar Vaidhya Kandam 600" and "Dhanvanthri Vaidhya Kaviyam 1000". Thirumoolar had described the different types of Piramehams and their nature and curative medicines (This author is different from the Thirumoolar of the 5th century, who wrote the Thirumanthiram). The pathological symptoms of Piramehams as described by this Siddha resemble those of Aids. The author has explained the resemblances between these types of ailments.

Drugs for the cure of meha diseases are described in this book. A preparation of medicine with roots of 234 kinds of plants is explained in Vaidhya attavanai, a part of this book. It is interesting to recapitulate the mentioning of the flowers of 98 varieties of flowers by Kabilar in his work "Kurinjippaattu". Seethala Sanjeevi Thailam, a preparation in an oil base, is a curative drug for pirameha diseases. Curative methods and the preparatory processes of drugs for the cure of these diseases, including diabetes, have been clearly explained in this book. The

editor has made minor alteration in a few places in the original to make the book readable and easily understood. The editor has also written a summary, explanatory notes and meanings of words for all the stanzas of this poetic work.

I am thankful to the District Collector and Director Thiru. **S. Kosalaraman,** I.A.S., for giving me permission to edit this book and the Administrative Officer Thiru. **Sami. Sivagnanam,** M.A., the Publication Manager and Librarian **A. Panchanathan,** M.A.,M L.I.S., Dr. **S. Prema,** M.D.(s), Ph. D., Dean, Faculty of Science, Tamil University, Thanjavur, for her valuable suggestion and assistance in the preparation of the text and Pavalareru **Balasundaram** and Late Prof. **Muthukumarasamy** for their guidance in correcting the manuscripts.

I am also thankful to the Government of India for giving grant to bring out such books and the Sarasvati Mahal Library DTP operators Mr. **R. Subramanian** and Mr. **K. Padmanabhan** who printed the book with great care and neat execution.

I hope this book will be useful to those who are interested in siddha medical system, the research scholars in siddha medicines and the siddha medical practitioners.

09-02-2003 **C.Rengarajan.**
Thanjavur.

## வைத்திய நூல்கள்

| | |
|---|---|
| அகத்தியர் 110 | 30 - 00 |
| அகத்தியர் 100 | 30 - 00 |
| அகத்தியர் 200 பாகம் III | 150 - 00 |
| அகத்தியர் அட்டவணை வாகடம் | 52 - 00 |
| அக்கால சித்தவைத்திய பலமுறைகள் | 20 - 00 |
| ஆயுர்வேத உபதேசங்கள் பாகம் I | 30 - 00 |
| ஆயுர்வேத உபதேசங்கள் பாகம் II | 15 - 00 |
| போகர் நிகண்டு அட்டவணை | 18 - 00 |
| தன்வந்தரி ஏரண்டத் தைலம் | 20 - 00 |
| சித்தமருத்துவ ஆய்வுக்கோவை | 125 - 00 |
| எண்ணெய் வாகடம் | 40 - 00 |
| கர்ப்பிணி பாலரோக சிகிட்சை | 45 - 00 |
| குன்மரோக சிகிட்சை | 100 - 00 |
| ஜ்வரரோக சிகிட்சை | 50 - 00 |
| மச்சமுனி நாயனார் 800 | 21 - 00 |
| நயனரோக சிகிட்சை | 70 - 00 |
| பஞ்சகாவிய நிகண்டு | 150 - 00 |
| சௌமிய சாகரம் | 70 - 00 |
| குழந்தை பராமரிப்பு | 10 - 00 |
| பாண்டுகாமாலை சிகிட்சை | 40 - 00 |
| பேதி அதிசார சிகிட்சை | 60 - 00 |
| பலதிரட்டு வைத்தியம் | 50 - 00 |
| இராமதேவர் சூத்திரம் | 75 - 00 |
| க்ஷய, உளமாந்தை சிகிட்சை | 18 - 00 |
| அக்கால சித்தவைத்திய அனுபவமுறைகள் | 40 - 00 |
| சுவாசகாச சிகிட்சை | 25 - 00 |
| சூலை, குட்ட, மூல ரோக சிகிட்சை | 80 - 00 |
| சித்த மருத்துவச் சுடர் | 200 - 00 |
| தேரர் நீர்க்குறி சோதனை | 10 - 00 |
| வைத்திய ரத்னாவளி | 160 - 00 |
| வைத்தியத் திரட்டு | 40 - 00 |

# முன்னுரை

"மேகவாகடம்", "மேககுணவாகடம்" என்று தலைப்பிடப்பட்ட இரு அரிய சுவடிகள் (சுவடி எண் 648, சுவடி எண். 127) தஞ்சை சரசுவதி மகால் நூலகத்தில் உள்ளன. மேகவாகடத்தில் 33 பாடல்களும், மேககுணவாகடத்தில் 107 பாடல்களும், வைத்திய அட்டவணையில் (சுவடி எண். 121) 31 பாடல்களும் உள்ளன. வைத்திய அட்டவணையில் மேக நோய்களுக்கான மருந்துகள் கூறப்பட்டுள்ளன.

இச்சுவடிகள் இதுவரை பதிப்பிக்கப்பட்டதாகச் சான்றுகள் இல்லை. இதுபோன்று சுவடிகள் வேறு நூலகங்களில் உள்ளதாகவும் தெரியவில்லை.

இந்நூலில் "மேக உற்பவம், கிரச்சர உற்பவம் விளங்கக் கூறுதல்" (பாடல் 4) நீரிழிவு, (பாடல் 4), மேகம் 20, கிரிச்சரம் 20 (பாடல் 9) வகைகள் பற்றிய நோயின் கூறுகள் விவரிக்கப்பபட்டு இருக்கின்றன. மேக நோயின் இயல்புகள், கண்டறியும் வழிகளாக மணத்தால் அறிதல் (பாடல் 17), நிறத்தால் அறிதல் என்பன விளக்கப்படுகின்றன. இவ்வாறு கண்டறியும் முறையை - எண்வகைத் தேர்வு எனவும், "நீர்க்குறி நெய்க்குறி" எனவும், சித்த மருத்துவ நூல்கள் கூறும்.

சித்த மருத்துவ நூல்களில் "மேகம்" என்ற நோயானது இருவகையாக எடுத்துரைக்கப்பட்டு உள்ளது. 1. பிரமேகம், 2. மதுமேகம் என்பன. இந்நாளில் மதுமேகம் - நீரிழிவு நோய் என்பதாகக் கூறப்படும். பிரமேகம் என்பது பால்வினை நோயாகவும், கிரந்தி, வெள்ளை நோய், பரங்கிநோய் எனவும் வேறு பெயரிலும் அழைக்கப்படுகின்றது. இதில் மதுமேக நோயானது காலத்தால் முற்பட்டது. இது பற்றிய செய்திகள் தமிழ் இலக்கியங்களிலும், கல்வெட்டுகளிலும் கூறப்படுகின்றன. "பிரமேகம்" என்ற பால்வினை நோய் 1460ல் கடல் வழியைக் கண்ட பிறகு - வாஸ்கோடகாமா - வெளிநாட்டு கடல் மாலுமிகள் மூலம், தமிழகத்திற்குப் பரவியது. எனவே, மதுமேகத்திலிருந்து வேறுபடுத்துவதற்காக "பிறமேகம்" எனவும், பிரமியமேகம்

வழக்கத்தில் பிரமேகம் என்றழைக்கப்பட்டது. மேக நோய்பற்றிய கல்வெட்டு ஒன்று கடத்தூர், கோவை மாவட்டத்தில் உள்ளது. இதில் மேக நோயால் துன்புற்ற அதிகாரியின் பெயர் "விக்கிரம சோழ திரிபுவனசிங்கதேவன்" என்று பொறிக்கப்பட்டுள்ளது. ஆயின் இந்த அதிகாரிக்கு வந்தநோய் மதுமேகமாகவே இருத்தல் கூடும்; நேர்சான்றுகளில்லை. இதுபோன்றே காசிம் புலவரின் திருப்புகழில் மேகம் (பிர) பற்றிக் கூறப்பட்டுள்ளது. இதில் பால்வினை நோய் பெண்களால் ஏற்படுவது என்று உள்ளது.

நீரிழிவு[1] என்ற சொல்லாட்சியானது பிற்காலத்தில் தோன்றியது என்று சான்றுகளால் அறிஞர்கள் நிறுவுகின்றனர். (கி.பி. 18 - 19ம் நூற்றாண்டு) சித்தர்களின் பாடல்களை எண்சீர் விருத்த யாப்பாகக் கொண்டுள்ளனர். பாடல்கள் அனைத்தும் அந்தாதிப் பாடல்கள் என்றும் கூறப்படுகின்றன. மேற்கூறிய சான்றுகளால் பிரமேகம் என்பது பிற்கால நோய் என்பது அதுபற்றிய நூல்கள் 15ம் நூற்றாண்டுக்குப்பின் எழுதப்பட்டவை என்றும் அறியலாம்.

மிகப்பெரும்பான்மையான சித்த மருத்துவ நூல்களில் மதுமேகம் - பிரமேகம் என்ற நோயின் தன்மைகள் ஒன்றுபட அமைந்துள்ளன. ஆயின் மதுமேகநோயும் - பிரமேக நோயும் ஒன்றுக்கொன்று மாறுபட்ட நோய் இயல்புகளைக் கொண்டவைகளாகும். பால்வினை நோய்கள் - நுண்கிருமிகளான பாக்டீரியாக்கள் மூலம் பரவுகின்றன. இதை கனோரியா, சிபிலஸ் என்று அழைப்பார்கள். கணையமானது இன்சுலின் என்ற சுரப்பை வெளியிடாததால், சர்க்கரை நோய் ஏற்படுகிறது. ஆயின் இரண்டும் "சலவாயம்" என்ற பிரிவில் அடங்கும். எனவே, இருநோய் களையும் ஒன்றாகச் சித்தர்கள் கூறியிருக்கலாம். பாடல்கள் தொகுக்கும்போது, இடம்மாறி இருக்கவும் வாய்ப்புள்ளது.

சர்க்கரை நோயை, சிறுநீர் மூலம் கண்டறிவது இன்றும் வழக்கத்தில் உள்ளது. சிறுநீர் மூலம் கண்டறியும் முறை, சித்த மருத்துவத்திலும் உள்ளது. "தேரையர்" சிறுநீர் மூலம் நோய்களைக் கண்டறிவது பற்றி, "நீர்க்குறி - நெய்க்குறி" என்ற நூலை இயற்றியுள்ளார். அந்நூல் பல பதிப்புகளைக் கண்டுள்ளது. மேலும்

---

1. பாம்பாட்டி சித்தர் - ச. மாடசாமி, பக்கம் 8, ஓ - வெளியிடு, உமா பிரிண்டர்ஸ், இளையான்குடி -டிசம்பர் 1980.

சிறுநீர் அடைப்பு, சிறுநீர்த்தடை நோய் என்பன இந்நூலில் கூறப்பட்டுள்ளது. அவற்றைக் கண்டறியும் முறையும் உள்ளது. தேரையரின் நீர்க்குறி - நெய்க்குறியிலிருந்து மாறுபட்ட ஆய்வு முறைகள் இந்நூலில் கூறப்பட்டுள்ளன. இதுவரை இம்முறைகள் எதிலும்வெளிவரவில்லை. எனவே நீர்க்குறி - நெய்க்குறி ஆகிய அரிய செய்திகளைக் கூறும் முறையில் இந்நூல் உள்ளது.

"எய்ட்ஸ்" என்ற பால்வினை நோய் இன்று பரவலாகக் காணப்படுகிறது. மேகநோய் போன்றே, இந்நோயின் இயல்பு தெளிவாக இல்லை. பிரமேகநோய் - எய்ட்ஸ் நோய் இரண்டுக்கும் ஒற்றுமை காணப்படுகிறது. எய்ட்ஸ் நோயின் குறி குணங்களைப் பற்றிப் பிரமேகநோய் இயலில் பரக்கக் காணலாம். அகத்தியர் வைத்திய காண்டம் 600, தன்வந்தரி வைத்திய காவியம் 1000 போன்றவற்றில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

திருமூலர்[1] - மேகநோயின் வகைகளையும் அவற்றின் இயல்புகளையும் எடுத்துக் கூறுகின்றார். கி. பி. 5ம் நூற்றாண்டைச் சேர்ந்த திருமூலரிலிருந்து இவர் மாறுபட்டவர் ஆவர். எய்ட்ஸ் நோயின் தன்மைகள், இவரின் நூலுடன் பெரும்பாலும் ஒத்து வருவதைக் காணலாம். இந்நூலிலும் எய்ட்ஸ் நோயுடன் தொடர்புள்ள இடங்கள், பதிப்பாசிரியரால் விளக்கப்பட்டுள்ளன.

இந்நூலில் மேகநோய்க்கான மருத்துவம் கூறப்பட்டுள்ளது. "வைத்திய அட்டவணை "என்ற பகுதியில் **வேதவியாசரின்** வாகடமுறையில் 234 வகையான வேர்களைக் கொண்டு மருந்தகள் செய்யும்முறை கூறப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்தில் கபிலர் இயற்றிய குறிஞ்சிப்பாட்டில் ஏறத்தாழ 100 வகையான பூக்கள் கூறப்படும். அதனை ஒத்து, இது அமைந்துள்ளதைப் பாக்க மிகவும் வியப்பாக உள்ளது. "சீதள சஞ்சீவித் தைலம்" மேக நோய்தீர எளிய மருத்துவ முறைகள், அரையாப்பு என்ற மேகநோய், புண்கள், பற்று, பற்பம் போன்ற மேகநோய்க்கு மருத்துவ முறைகளும், மதுமேகம் நீங்க, மருத்துவ முறைகளும், வேறு சில முறைகளும் இடம்பெறுகின்றன. மருந்துவம் கூறும் பாடல்களும் உள்ளன. இந்நூலுக்கான உரையைப் பதிப்பாசிரியரே எழுதியுள்ளார்.

---

1. திருமந்திரம் - வைத்தியப் பகுதி - தா. ப. வேங்கடசுப்ரமணியன் திருவாவடுதுறை ஆதினம் - 1934.

மூலத்தைச் செம்மையாகப் பதிப்பிக்க ஏற்றவாறு மாற்றியுள்ளார் பதிப்பாசிரியர். "வைத்திய அட்டவணை"யில் பழைய உரை காணப்படுகிறது. இவ்வுரையாசிரியர் யார் என்பது தெரியவில்லை.

அண்மைக்காலத்தில் உள்ள வழிமுறைகளைக் கைக்கொண்டு செய்யுள் முதற்குறிப்பு, அரும்பொருள் வரிசை என்பனவும், உரை, உரை, விளக்கம் என்பனவும் என்னால் தரப்பட்டுள்ளன. நூல் பற்றிய எல்லா விவரங்களும், என்னால் எடுத்துத் தரப்பட்டுள்ளன.

இந்நூலைப் பதிப்பிக்க அனுமதி நல்கிய தஞ்சை மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் இயக்குநர் உயர்திரு. **சி. கோசலராமன்**, இ. ஆ. ப., அவர்களுக்கும், சரசுவதி மகால் நூலக நிருவாக அலுவலர் திரு. **சாமி. சிவஞானம்**, எம்.ஏ., அவர்களுக்கும், பதிப்புத்துறை மேலாளர் மற்றும் நூலகர் திரு. **அ. பஞ்சநாதன்**, எம்.ஏ., எம்.எல்.ஐ.எஸ்., அவர்களுக்கும், தக்க முறையில் நூல் அமைய கருத்துக்கள் தந்த Dr. **எஸ். பிரேமா**,எம்.டி., பி. எச்டி., (சித்தா), டீன், அறிவியல் புலம், தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகம், பாவலரேறுச.பாலசுந்தரனார் அவர்களுக்கும், காலஞ்சென்ற பேராசிரியர் **முத்துக்குமாரசாமி** அவர்களுக்கும் உளமார்ந்த நன்றி.

"மேகவாகடத் திரட்டு" என்ற இந்நூலைச் சித்தமருத்துவ ஆர்வலர்கள், அன்பர்கள், ஆய்வாளர்கள், சித்தமருத்துவர்கள் வாங்கி, ஆதரவு நல்க கேட்டுக்கொள்கிறேன். இந்நூலுக்கு நிதி நல்கிய நடுவண் அரசுக்கும், நன்முறையில் அச்சிட்ட சரசுவதி மகால் நூலக கணினி ஒளி அச்சுப்பிரிவு நண்பர்கள் திரு. **ஆர். சுப்ரமணியன்** அவர்களுக்கும் மற்றும் திரு.க. **பத்மனாபன்** அவர்களுக்கும் மற்றும் இதற்குத் துணைநின்ற ஏனையோருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தஞ்சாவூர் அன்பன்,
10-10-2002 **மரு. ச. அரங்கராசன்**, பி. ஐ. எம்.,

# மேகவாகடத்திரட்டு

*மண்டலம் தன்னி லுள்ள*
*மனிச ராய், பெண்ணா னார்க்கும்*
*கொண்டதோர், பிரமே, கந்தாம்*
*கொள்ளுமுன் எடுக்கும் நோய்கள்*
*கண்டிடும் உடல்கை கால்கள்*
*கழன்றுமுன் எரித்துக் காந்தி*
*உண்டநீர் சுவறிக் காட்டாது*
*உடைத்துநீர் பாயு மன்றே.*

**உரை:** இவ்வுலகத்தில் பிறந்த பெண்கள், ஆண்கள் ஆகியோருக்கு பிரமேகம் எனப்படும் மேக நோயில் ஏற்படும் குறி குணங்களாவன கை, கால் என்பன உடலிலிருந்து தனியாக வருவது போன்ற வலியுடன் கூடிய உணர்ச்சி, கை கால்களில் எரிச்சல், குடிக்கும் நீர், மேட்டு நிலத்திலிருந்து இறங்குவது போல வருதல் என்பன ஆகும். மேட்டிலிருந்து கீழிறங்கல் உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

*குறிப்பு:* மேகநோயின் ஒருவகையான கிரந்தி (சிபிலிஸ்) என்பது நோயுள்ள பெண்ணின் கரு, குழந்தை என்பவற்றையும் தாக்கும் இயல்புள்ளது என்பதை அண்மைக்கால அறிவியலார் கண்டறிந்துள்ளனர். குழந்தையின் கண்கள் இதனால் பார்வையை இழக்கும். இதைத் தடுக்க, சில்வர் நைட்டிரேட் கொண்ட மருந்துத் துளிகளை கண்களில் போடுவார்கள். இதன் மூலம் கண்கள் குருடாவதைத் தடுக்கலாம்.

*கேளாய், போகம் அனுதினமும்*
*உண்ணும் அடிசில், பலமதனைக்*
*கேளாய்க், குற்றம், பலதோடம்*
*குடிமைக், குருக்கள், பிதாமாதா*
*வாழாக், கன்னி, தாமழிந்து*
*வரம்பு கடந்து மாறாகிக்*
*கேளாச் சத்தங் காணாக்கண்¹*
*கெட்டுக், கண்டவர் போற்பேசி*
*ஊழா உடலில் உள்ளுடைந்து*
*உளுத்த மரம்போல் உள் கழன்று*
*மாழா மாளும் வியாதியினால்*
*வலியச் சாபம் நோயி டுமே.**

**உரை:** கேளுங்கள், நோயின் காரணத்தை, நாள்தோறும் பெண்களிடம் இன்பத்தைப் பெறுவது, இன்பம் துய்ப்பதற்கு முன் உணவு உட்கொள்வது, ஆசிரியர்,தாய், தந்தை, பிற பெண்களுடன் தொடர்பு வைத்தல், வேறு வகையான குற்றங்களைச் செய்தல் போன்ற காரணங்களால் உடல் கெடும் உளுத்துப் போனமரம் போல, அகஉறுப்புகள் சீர்கேடடையும்.

**குறிப்பு:** மனைவியிடத்தில் ஒரு முறைகூட இன்பம் அடையாத நிலையைச் சுட்டிக்காட்ட 'வாழாக்கன்னி' என்றுரைக்கின்றார். குற்றம் மனத்தளவிலும், செயலளவிலும் அமையும். இது தோடம் என்று கூறப்பட்டுள்ளது.

.................................................................................................

★இப்பாடலுள் இரண்டு அடிகள் மிகுதியாக உள்ளன.
*1. தன்வந்திரி வைத்தியத்தில் இச்சொற்கள் வருகின்றன.*

3. *முகமே காந்தி நெஞ்சுலர்ந்து*
*முரித் துடலும் நடுநடுங்கும்*
*நகமே பிதிர்ந்து சிரம் நெகிழ்ந்து*
*நஞ்சுண் டவர்போல் மிகச் சோர்ந்து*
*பகலும் இரவும் உறங்கியுடல்*
*பருத்துக் காட்டி மெலிந்துழன்று*
*மிகவே தபனம் உணடாகும்*
*வேண்டா தன்மை வேண்டாவே.*

**உரை :** முகமானது வாடிக் காணப்படும். நெஞ்சு உலர்ந்திருக்கும். உடலில் நடுக்கம் ஏற்படும். சோம்பல் முறிக்கும். நகம் உதிரும். தலை நெகிழ்ந்து, உறுதியுடன் இல்லாமல் தோன்றும். மிக்க களைப்பு ஏற்பட்டு நோயாளர் இரவு, பகல் என்ற வேற்றுமை நீங்கி எப்போதும் தூங்குவார்கள். வேலையின்றி இருப்பதால் உடல் பருத்தும் அல்லது மெலியவும் கூடும். பசி அதிகரிக்கும் உடலில் வெப்பம் அதிகமாகும். உணவில் நாட்டமின்மையும் உண்டாகும்.

*மெய்யெரு, எரிந்து சுடநாறி*
*விழியே, பல்கால் மிகமூடி*
*கைகா, லெரிந்து, நாவுலர்ந்து*
*கமல முகமும் வெளுவெளுத்து*
*அய்யோ, குடலும் நோகுதென*
*அயர்ந்து கிடக்கும், கனாக்காணும்*
*பொய்யோ, அல்ல, தபன முண்டாம்*
*பொருந்தாத் தன்மை, பொருந்தாதே.*

**உரை :** உடல், மலம் என்பன வெப்பத்தால் கறுத்துப் போகும். கை, கால்களில் எரிச்சல் உண்டாகும். நாற்றமிகும் விழிகள் மூடி இருத்தல், தாமரை போன்ற முகமானது இரத்தமின்னையால் வெளுத்து இருத்தல், வயிற்றில் வலி, அதிக தூக்கம், அதில் கனவுகள் காணுதல், மிக்க சூடு, உணவை விரும்பி உண்ணாதிருத்தல் ஆகிய தன்மைகள் ஏற்படும்.

5. பாலா காஆ காநெய்யும்
பருகா காகா பாவையர்தன்
மாலா காகா மீனிறைச்சி
வாகா காகா மெலப் பருக்கும்
.........................................
மருந்தே, பருகில், மடைபோல
வருநீர், பருகி, விடுமயர்ந்து.

6. கொள்ளு, காடி, கும்மட்டிக்காய்
கோழி, பன்றி, வெள்ளாடு
முள்ளுப் பெரிய பாகற்காய்
முழுதும் நல்ல பூசணிக்காய்
கிள்ளுக், கீரை, அரைக்கீரை,
கிடங்கிற், படரும், செம்புடனே
எள்ளத், தனையும், தின்பீரேல்
இட்ட மருந்தை, இழந்தீரே.

**உரை :** பால் நெய் போன்றவைகள், பெண்நுகர்ச்சி, மீன், இறைச்சி போன்ற புலால்வகைகள், (குறிப்பாக கோழி, பன்றி வெள்ளாடு) காடி, தாவர உணவுகளான கும்மட்டிக்காய், கொள், முட்பாகல், சாம்பல், பூசணிக்காய், கீரை, அரைக்கீரை என்பன பொருந்தா உணவு வகைகளாம். மீறி உண்ண மடை திறந்த நீர் வருவது போலச் சிறுநீர் வெளிப்படும். உண்ட மருந்துகள் செயல்படாமல் போகும்.

*குறிப்பு :* அது பிரமேக நோய் என்பது மாறி, மது மேக நோய்க்கான பாடலாகும். பாடல் உள் பிரமேக நோய்க்கான இலக்கணம் கூறப்பட்டுள்ளது. பாடல் 5, மதுமேக நோயின் தன்மைகளைக் கூறுகின்றது. அன்னமய கோசத்தில் - பகர் வாசயத்தில் உள்ள உணவு, தக்கபடி அன்ன இரசமாக மாற்றமடையாமல், சிறுநீருடன் வெளியேறுகிறது. மாவுப் பொருள், சர்க்கரையாக மாற்றப்படாமல்வெளியேறுவதே நீரிழிவு நோய் எனப்படும் என அறிவியல் அறிஞர்கள்

கண்டறிந்துள்ளார்கள். இன்சுலின் பற்றாக்குறையால் இது ஏற்படும். இதற்கு இன்சுலின், ஊசி வழியாக உடலில் செலுத்தப்படுகின்றது. எனினும் இதற்குத் தக்க மருத்துவம் இன்றுவரை இல்லை. இந்நோயைக் கட்டுப்படுத்தும் மருத்துவம் செய்யப்படுகின்றது. முழுவதும் நீக்குவதற்கு இம்முறையில் வழிகள் இல்லை.

7. *மாங்காய் இளநீர் வழுதுணங்காய்*
*மாவுப்பண் டம்புளி கடுகுசுக்கு*
*தேங்காய்ப் பால்கிழங் குப்புதுகள்*
*வெங் காயம் பெருங்காயம்*
*நீங்கா தருந்த, மைதுனமும்*
*நேசம், பயிலும், சுராபானம்*
*ஆங்கே, இவைசற், றெள்ளவும்*
*அருந்தா திருக்கின் மருந்தாமே.*

**உரை :** மாங்காய், இளநீர், கத்திரிக்காய் மாப்பொருட்கள், புளி, கடுகு, சுக்கு, தேங்காய்ப் பால், கிழங்கு, மதுபானங்கள், வெங்காயம், பெருங்காயம், பூண்டு, பெண்மேல் விருப்பம், இவைகள் கூடா. இவ்விதிகளே, மருந்துகளை உண்பதற்கு ஒப்பாகும்.

8. *மானார், குழலீர், கறிகேளீர்*
*மலநீர்[1] கழிந்த மனிதர்க்குக்*
*கானில், வாழும் முயல் நீட்டும்*
*புகரடை சீலைகௌ தாரிநத்தை*
*ஊனே பருத்த வெள்ளாட்டின்*
*உப்புக் கண்டம் முருங்கைக்காய்*
*மீனே, மீனே, தின்பீரேல்*
*வீணே, தான்விழுந் திடுமுயிரே.*

---

1. மலநீர் என்பதை பலநீர் என்று கொள்ளுதல் பொருள் படைத்ததாகும்.

**உரை :** மான்போன்ற பெண்ணே, நோய்க்குரிய பத்திய உணவுகளை கேட்டுக் கொள்ளவும். பலமுறைநீரானது வெளியேறும். மதுமேக நோயினர் முயல், கவுதாரி, நத்தை மிக்க கொழும்புச் சத்து உள்ள வெள்ளாட்டு இறைச்சி அதன் உப்புக்கண்டம், முருங்கைக்காய், மீன் என்பன உண்ணக்கூடாது. இவற்றை பின் பற்றாவிடில், உயிர் போகும்.

9. *கொண்டைக் காடைகொள்*
*குறுவைநெல் லரிசி*
*பெண்டைக் காமுறு*
*பேசினும் நாடொறும்*
*நண்டைப் பொடித்து*
*நத்தையி னுட்சதை*
. . . . . . . . . . . . . . . . . . . . . . .

10. *தேமாநிலத்துள் ளோர்க்கு அந்த*
*அப்பிய பிரமேகமானால்*
*அது செய்யும் குணங்கள் கேளாய்*
*ஒப்புறுநெய் நாற்றப் பிரசமும்*
*அதுவேயாகும் மெய்ப்புறு*
*காய்ச்சும் கரகம்*
..........................................
*விளக்கினில் எரியும் தாணே.*

**உரை :** பிரமேகம் என்ற நீரிழிவுவகை நோயில் நெய், தேன் போன்ற நீர் ஒழுக்கு இருக்கும். இதை விளக்குத் தீயில் காய்ச்சிக் காண விளங்கும்.

உண்டக் காலுலகு
ஒளியிழப் பாரே.

**உரை :** உலகில் மது மேக நோயாளிகள் உண்ணக் கூடாத உணவுப் பொருட்கள். கொண்டையை உடைய காடை, குறுவை அரிசி, நண்டுப்பொடி, நத்தையின் உட்சதை, என்பனவாகும். இவைகளை உண்ண, உடலின் வன்மையை இழந்துவிடுவார்கள்.

11. ஆமையுடும்பு சேவல்.......
தேமா, நிலத்துள், ளோர்க்கந்த
அப்பிய பிரமே கம்மானால்
அதுசெய் யும் குணங் கள் கேளாய்
ஒப்புறு நெய்யின் நாற்றம்
இரசமும் அதுவே யாகும்
மெய்புறு காச்சுங் கற்கம்
விளக்கினி, லெரியும், காணே*.

**உரை :** பிரமேகம நோயின் தன்மைகளை அறியலாம். நோயாளியின் சிறுநீரை விளக்கின் ஒளியில் காய்ச்சவும். அப்போது, நெய்யின் மணம் தேனின் மணம் என்பன வீசும்.

12. மதுமயப், பிரமேக மானானல்
வந்திடும் குணங்கள் கேளாய்,
அது மெய்யில் புலாலது நாறும் கண்டாய்
இடுவது மெய்யாக் காச்சும்
பிறகுதே னதுவே யாகும்
முதுமையாய் முனிவன் சொன்ன
நூலிது மொழியு மாறே.

**உரை :** மது என்ற பிரமேகத்தின் தன்மைகள்; புலால் நாற்றத்துடன் சிறுநீர் இருக்கும். இச்சிறுநீரைத் தீயிலிட்டுக் காய்ச்சும் போது, தேன் போன்று காணப்படும். நூல்களில் கூறப்பட்டுள்ளது.

13. அசனியப் பிரமேக மானானல்
அதுசெயும் குணங்கள் கேளாய்[1]
கசமது மூன்று நாளும்
காய்ச்சினா லிரையும் கண்டாய்

---

* இப்பாடல்கள் சிதைந்துள்ளன. இரசம் என்பதை பிரசம் என்று கொண்டால் சிறப்புடையதாகும்.

1. தன்வந்திரி வைத்தியத்தில் உள்ள பாடல் 8 இன் முதலடியாக உள்ளது.

*விசனமுள, பிரமேகம் நாலும்*
*கொண்டலர், மரிப்பர், திண்ணம்*
*விசைமரு மாதர் காணும்*
*மிகவிது போ லறாது காணே.*

**உரை :** அசனியம் என்ற பிரமேகத்தின் தன்மைகள். சிறுநீரைத் தீயிலிட்டுக் காய்ச்ச, இரையும். இதைச் செய்து, காணவும் 4 வகையாகப் பிரமேக நோயை அடைத்தவர்கள், இறந்து போகும் வாய்ப்புகள் அதிகம். இப்பாடலின் முதலடிகள் தன்வந்திரி வைத்தியம் பாடல் 9 இல் (பாகம் 2.) உள்ளன. இந்நூல் சரசுவதி மகால் வெளியீடாகும்.

*குறிப்பு:* தற்கால வேதியல் கூடங்களில், நீரிழிவு நோயை ஆய்ந்து அறிகின்றார்கள். நிறத்தைக் கொண்டு இதை அறிவார்கள். இங்கு மதுமேகம் என்பதற்குப் பதிலாக பிரமேகம் என்ற சொல்லாட்சி உள்ளது.

14. *பவத்தா லெடுக்கும், இவை நாறும்*
*பனைநுங் கதுபோல் நிறப்பிக்கும்*
*எவர்க்கும் மீள வரிதாகும்*
*மீட்டிட மருந்தும் கோராது*
*கவர்க்கும் கவணெணம் பின்னெடுக்கும்*
*கணைக்கும், மறுமலம் சற்றுவரும்**
*எவர்க்கும் பணத்தை அளியாதே*
*இட்ட மருந்தும் ஏறாதே.*

**உரை :** பனையின் நுங்குபோல வெண்மையாக நீர் வெளியாகும். கூறப்பட்ட (வாத) நான்குவகையான நீரிழிவும் தீராது. மருந்துகளைத்தர உடல் ஏற்றுக்கொள்ளாது. மருந்துகளை வெளித்தள்ளும். கணை, இருமுறை மலம் என்பன வரும். எனவே, இந்நோயாளிகளிடம் பணத்தைப் பெறக்கூடாது.

---

* இவ்வரிகள் சரிவர இல்லை.

**குறிப்பு :** கணை என்ற சொல்லால், இது சிறுவர்களுக்கான நீரிழிவாதல் கூடும். இந்நான்கு நீரிழிவும், வாதத்தால் ஏற்றபட்டவைகள் ஆகும்.

15. *பித்தரோ கத்தால் வந்த*
*பிரமேகம் ஆறும் கேளாய்*
*மத்தமா மரிதானப் பிரமேகம்*
*மந்தநீர், மஞ்சட் போலே*
*சுத்தமா மிந்த நாற்றம்*
*இரசமும் இதுவே யாகும்*
*மந்தமாம் பலப்பிர மேக*
*வகையது கூற லுற்றேன்.*

**உரை :** பித்தத்தால் ஏற்பட்ட பிரமேகவகைகள் ஆறு என்பர். அவற்றை விள்குகின்றேன். கேட்கவும். அரியதான பிரமேக சிறுநீர் மஞ்சள் வண்ணத்தில் அமையும். இதைக் காய்ச்ச மஞ்சள் கிழங்கின் மணம் வீசும். பலப்பிர மேகத்தின் தன்மை கூறுவேன்.

16. *அறிந்த நீர், புளித்து, நாறி*
*மலமுமப், படியே நாறின்*
*அறிந்துகொள், அதனை, நீயும்*
*பலப்பிர மேகம் என்று*
*பறிந்துதான் போய்வி, டாதே*
*பரிகாரம் செய்யத் தீரும்*
*அறிந்துதான் கசாயப் பிரமேகம்*
*அதன்வகை, கூற லுற்றேன்.*

**உரை :** பலப்பிரமேக நோயாளியின் சிறு நீர், புளித்து, நாற்றமுடன் இருக்கும். மலமும் நாற்றமுடன் வெளியாகும். இதற்கு மருத்துவம் செய்ய, தீரும். கசாயப் பிரமேக வகையைக் கூறுகிறேன், கேட்கவும்.

17. *பிராணாபி காரி யந்த*
*பிரமேகம் தன்னைப் பார்த்தால்*
*திராணிசெவ் வள்ளிக் கொடி*
*காய்ச்சின நீரே போலப்*
*பிராணிதன் நாவில் வைத்தால்*
*நீற்றமும் அதுவே யாகும்*
*சுரோணிதம் பிரமே கத்தின்*
*சூட்சமம் கூற லுற்றேன்*

**உரை :** பிராணுபகாரி என்ற பிரமேகத்தின் சிறுநீர், தீயிலிட்டுக் காய்ச்ச சிவப்பாக செவ்வல்லிக் கொடியின் சாற்றை ஒத்திருக்கும். சுவைத்துப் பார்க்க, அக்கொடிச் சாற்றின் சுவையைக் கொண்டிருக்கும். சுரோணிதம் என்ற பிர மேகத்தின் நுட்பம் கூறுகின்றேன்.

18. *கழியும்நீர் வெண்ணு, ரையாய்க்*
*கலந்தங்கே, கழியும், கண்டாய்*
*நளியதாய் நயந்தி ராதே*
*நாமிது அறிந்து சொன்னோம்*
*மிளிர்கின்றநீர், இருகண் கூர்மை,*
*இனிச்சொல்வேன், ஆனைப்பிர, மேகம்*
*வெளியுலாவப், பிரச,ரிக்க*
*வேண்டிடும், கண்டு, கொள்ளே.*

**உரை :** இவ்வகையான பிரமேக சிறுநீரானது வெண்மையான வண்ணமுடன் நுரையுடன் அம்பைப் போன்றது விரைவாக வெளியாகும். இனி ஆனைப்பிரமேகத்தின் தன்மைகளைக் கூறுகின்றேன்.

19. சற்றுசற், றாக, வீழ்ந்து
கடுத்திடும் இலிங்கம் தன்னில்
உற்றுடன் எங்கும் பாரத்து
விழாய்வது இதுவே யென்ன
மற்றுமுன், சிகாப் பிரமேக
வகையிது கூற, லுற்றேன்.

**உரை :** சிறுநீரானது சொட்டுச் சொட்டாய் இறங்கும். நீர்ப்புழை கடுக்கும். சிகாப்பிர மேகத்தின் தன்மைகளைக் கூறுகின்றேன்.

20. இறையநீர் இரச முண்டாய்
திணுங்கிநா, வுலர்ந்து, பின்னை
மறையவே காய்ச்சிப் பார்த்தால்
வந்து சீக் கரம் போல் நாறும்
நெறியிது அறிந்து சொன்னேன்
நீரின கூறி, ஙன்கேள்
அறிவன இலவணப் பிரமேகம்
அதுவழி, கூற லுற்றேன்.

**உரை :** இதன் தன்மைகள், நாக்கு உலர்ந்து போகும். சிறுநீரைக் காய்ச்சிப் பார்க்க, சீழ் வைத்தப் புண்ணினில் நாற்றம் வீசும். இவ்வகையின் வழிகளை அறிந்து கூறுகின்றேன். இலவணப் பிரமேகம் பற்றிக் கூறுகின்றேன்.

21. வந்ததோர் பிரமே கந்தான்
வலிமையால் எளிமை போலும்
முந்தநீர்.... பசுத்திரம்
ஈவது கரைத்த நீர்போல்
இந்தநற் பிரமே கத்தின்
இயலது பிரமே கத்தின்
அந்தரப் பிரமே கத்தின்
அடவது கூற லுற்றேன்.

**உரை :** இதன் சிறுநீர், பசுவின் சிறுநீரை ஒத்துள்ளது. அந்தரப்பிரமேகத்தின் சிறுநீரின் தன்மைகளைக் கூறுகின்றேன்.

22. *நின்றநீர், நிரை நீராக்*
*கழிவது, வஞ்சி, போலே*
*சென்றது, கண்டக் காலும்*
*திடனிதை அறிந்து கொண்டு*
*நின்றுபரி, காரம், செய்ய*
*நீர்செயம், இதுதா னென்று*
*நன்று சுரப் பிரமே கத்தின்*
*நலங்குணம் கூற லுற்றேன்.*

**உரை :** அந்தரப் பிரமேகத்தில் சிறுநீர் வஞ்சிக் கொடியின் சாறு போல் இறங்கும். இதை அறிந்து கொண்டு தக்க மருத்துவம் செய்யலாம். அவ்வாறு செய்ய, நீரிழிவு கட்டுப்படும். சுரப்பிரமேகத்தின் தன்மையைக் கூறுகின்றேன்.

23. *கட்டுண்ட, சுனைநீர், போலக்*
*கரும்பினிற், சாறு போலத்*
*தட்டுண்ட, கூறை, நீர் போல்*
*தப்பாது கூர்மை கண்டாய்*
*மட்டுண்ட சுத்தி யற்கு*
*வகையது அறிந்து சொன்னேன்*
*முட்டுண்ட பிட்டால் பிரமேக*
*மொழிகிறேன் கேட்டி டாயே.*

**உரை :** சுனையின்நீர் போல மிகக் குளிர்ந்து காணப்படும். கரும்புச் சாறு போல் இனிப்பாக இருக்கும். கூரையில் உள்ள நீர் வடிவது போல் இறங்கும். இதை நுட்பமாக அறியவும். இடையூறு செய்யும் பிரமேக நோயைப் பற்றி எடுத்துக் கூறுகின்றேன்.

24. இழிந்தநீர், இதனைப் பார்த்தால்
இருந்திடும், பன்னீர் போலக்
கழிந்தநீர்க், கூர்மை கண்டு
கடுகெனப் பரிகா ரம்செய்
ஒழிந்துதான் போவ தென்று
ஓதிய ஆயுள் வேதம்
மொழிந்தபெண், பிரமே கத்தை
முயற்சியாய் கேளும் நீரே.

**உரை :** வெளியாகும் சிறுநீர் பன்னீர் போல இருக்கும். இதன் நுட்பத்தைக் காணவும். சிறுநீரின் தன்மையைத் தெரிந்து, தக்கபடி மருத்துவம் செய்யவும். பெண்களுக்கு வரும் (மது) மேகநோயைக் கூறுகின்றேன்.

25. பெருகவே இறங்கும் நீரின்
பின்சலம் போல வீழ்ந்து
அருகவே, உடலைப் பற்றி
அதுசுருக், கென்று, வாங்கும்
உருமழக் கோதை நல்லாய்
உந்திசுக் கிலப்பிர மேகம்
பெருகிய நூலி னாலே
பேணியே உரைக்க லுற்றேன்.

**உரை :** மதுமேகம் நோயில் அதிகமாக சிறுநீர் வெளியாகும். சிறிது சிறிதாய் உடல் வன்மையை விரைவாகக் கெடுக்கும். பிரமேகம் பற்றிக் கூறுகின்றேன்.

26 இந்திரிய நீரே போல
இலிங்கத்தின் மூக்குப் போல
நந்தலை முறை போல
நலியாமல் புறப்பட் டோடும்

*மந்தவா தத்தில் நாலும்*
*நீங்கலாயப் பித்த மாறும்*
*மந்தசிலேத் துமத்தில் பத்தும்*
*இதுதீர மருந்து சொல்வேன்.*

**உரை :** சிறுநீர், விந்து போலக் காணப்படும் தண்டிலிருந்து முளை போலவும், மொட்டுப் போலவும் விழும்.

வாதத்தால் ஏற்படும் மதுமேக நோய் 4 வகைகளாகும். பித்தத்தால் ஏற்படும் மதுமேகம் 6 வகைகளாகவும், கபக் குற்றத்தால் உண்டாகும் மதுமேகம் 10 வகைகளாகும். இவைகள் நீங்க, மருத்துவம் கூறுகின்றேன்.

## மருத்துவம்

27. *ஆரே, ஆரே, வருகின்றீர்*
*ஐயும், பித்தும், அகத்தடக்கி*
*நீரே, நீரே, ஆகிலும் கேள்*
*நெய்யற்ற, மோரே, மிகப்பருகி*
*பாரீர், பாரீர், முசுட்டையிலே*
*பறித்துப் பறித்து, அவையின் தூறு*
*தூறே, தூறே, கொள்கின்றேல்*
*தோற்றீர், நீரே, தோற்றீரே.*

**உரை :** கபம், பித்தம் ஆகிய குற்றங்களை அடிப்படையாகக் கொண்டுள்ள மதுமேகத்தைப் பற்றிக் கூறுகின்றேன். வெண்ணெய் நீக்கிய மோர் அதிகம் குடிக்கவும். முசுட்டை இலை, அதன் வேர் இவற்றை உட்கொள்ளவும்.

**குறிப்பு :** கொழுப்பு நீக்கிய மோரை குடிக்க இன்று அறிவியல் அறிஞர்கள் கூறி வருகின்றார்கள். இதை அன்றே, குறிப்பிட்டுள்ளது வியக்கத்தக்கது !

28. ஆவரைத்துளிர் கல்மதம்*
கொன்றை வேரணிய
விரைந்து கடிபுளி மோருடளே
.................. வான்
விரைந்து வரும் புனல் காலே தான்
......................
விரைந்து வரினும் தடுக்குமோ.

29. ஆவிரைக் கொன்றை நல்ல
அழகிய, பூகம், மத்தம்
மேவிய மருதின் தோலும்
விரைந்துடன் ஒக்கக் கூட்டிப்
பூவினில் சிறந்த மாதே
புதியதோர் தேனி லுண்ண
காவிரி நீரும் வற்றிக்
கடல்களும், சுவறு, மன்றே.

**உரை :** தேரையரின் பாடல் போல இப்பாடல் உள்ளது. ஆவாரைப்பூ கொன்றைப்பூ, ஊமத்தைப்பூ, மருதமரம் பட்டை இவற்றை ஒன்றாகச் சேர்த்து இடித்து எடுத்துக் கொள்ளவும். தேனில் தக்கப்படி உண்ண காவிரி நீர், கடல்நீர் போன்ற நீரிழிவு நோய்கள் தீரும். காவிரிநீர் இனிப்பு சுவைக்கும், கடல்நீர் உப்பு நீருக்கும் நல்ல எடுத்துக்காட்டுகள். சிறுநீர் உப்பு கலந்துள்ளது என்பதை அண்மைக்கால மருத்துவ வல்லுநர்கள் கண்டறிந்துள்ளனர்.

*குறிப்பு :* ஊமத்தம்பூ மயக்கம் தரும் தன்மையுள்ளது. பயன்படுத்துவது பற்றி மிகவும் கவனமுடன் செய்தல் வேண்டும்.

30. காந்மொடு, திரிபலம், வீசம்
கருதரிய, முத்தக்காசு மஞ்சட்டி
மாந்தர் பகருமிளை சுக்குமிக
மரிசனம் கொண்டு திப்பிலி

*தந்து, முலையாய், கையாந்தகரை, விற்றால்*
*இசைய அரைத்தெடுத்த சுண்டையொன்றே*
*ஆய்ந்தபசுத் தேனுடனே அருந்திக்*
*கொண்டால், ஆனான, நீரிழிவும் அமைந்து,*
*போமே.*

**உரை :** காந்தச் செந்தூரம், திரிபலாச் சூரணம் வீசம் அளவு உண்ணலாம். முத்தக்காசு, மஞ்சட்டி, திரிகடுகு இவற்றைப் பொடி செய்து, கரிசாலைச் சாற்றில் அரைத்துக் கொள்ளவும். சுண்டைக் காயளவு தேனில் உண்ணவும்.

31. *தகரம், கோட்டம் சிறுதேக்கு*
*சாதிக், காய்பொன், னாவரைவேர்*
*நிகரக் கொண்டதைப் பொடிசெய்து*
*நிருதி, ஒருமண்,டலங் கொள்ளின்*
*மகரஞ் செறியும் கடலதுபோல்*
*வரும்நீ ரெல்லாம் பருகுமென*
*நகரந் தோறும் பறைமின்ன*
*நன்னீ ரிழிவால் நலிவீரே.*

**உரை :** தகரம், கோட்டம், சிறுதேக்கு, சாதிக்காய், பொன்னாவரைவேர், சமஅளவு எடுத்துச் சூரணம் செய்து கொள்ளவும். மண்டலம் உண்ண, நலிவடையச் செய்யும் நீரிழிவு நோய் நீங்கும்.

**குறிப்பு :** மதுமேக நோயைப் பற்றிய பாடல்கள் என்பதை ''நன்னீரிழிவால் நலிவீரே'' என்ற அடிகள் உறுதி செய்கின்றன. எனவே, தலைப்பில் கூறப்பட்ட பிரமேகம் என்பது தவறு. மதுமேகம் என்பதே சரியான தலைப்பாகும். இது ஏடு எழுதுவோரின் தவறாகும்.

32 ஓரரைக்கால், குழவிந்த
மெழுகரைக்கால் கருவேற்பிசின்
நீரரைக்கால் மரமஞ்சள்
இருபதரைக்கால், விரைவிட
தேரரைக்கால், கடுகரைக்கால்
திரளரைக்கால், தின்பீரேல்
நீரரைக்கால், போகாது
நெடுமாலாணை, நிச்சயமே.

33. பிண்ணாக்குப் பொடி செய்திட்டு *
ஆவிரையின், கொழுந்துடனே
விண்ணோக்கும், வெயில்தனிலே
விரித்துலர்த்தி, வேறுவைத்து (மிகநன்றாய்)
பண்ணோக்கும், மென்மொழியாய்
பாடலொத்த, உண்ணாக்க, விடுவீராகில்
நீராழாக்கும், போகாதென், றறிவித்தோமே.

**உரை :** பிண்ணாக்குப்பொடி, ஆவாரைக்கொழுந்து இவற்றை சூரியஒளியில் வைத்து, தனியாக எடுத்துக்கொள்ளவும். தேனில் கலந்து, விழுங்க, ஆழாக்கு அளவு சிறுநீர் வெளியாகாது என்று அறிவிக்கின்றேன்.

34 கறுத்த அயம் பதின்கழஞ்சு
உருகிவரும்... முகத்தில்
செறுத்த இதரம் ஈரிரண்டு
தெளியும், படிக்கு, வார்த்ததனை
இறுத்த, மோரி, லேயரைத்து,
இருபத், தாறு, உண்டைதனை

---

*இப்பாடல் சிதைந்துள்ளது.

18

*நிறுத்தபழம் செந்தூரம் சாதிக்காய்*
*சாதிபத்திரி கிராம்பு சாதிலிங்கம்*
*காந்தம் குரோசானி ஓமம்*
*அக்கிரா காரம் காசுக்கட்டி ஓரோன்று*

**உரை :** கறுப்பான இரும்புத்தூள் 13 கழஞ்சு எடுத்துக் காள்ளவும். உருக்கவும். ஏனையவை 6 கழஞ்சு. மோர்விட்டு ரைத்துக் கொள்ளவும். 26 உண்டைகள் செய்து கொள்ளவும்.

முற்றும்.



## மேகநோயின் பிறப்பு

### மேக உற்பவம்

### காப்புச் செய்யுள்

1. *வானுலவு மேகமென வந்தே மலவுடலில்*
*தான்மருவும் நாலைந்து சாதிகளை - நான் முனிவன்*
*வாதபித்த சேத்துமம் வகையெல்லாம் வாகடத்தால்*
*ஓதினர் வைத்தே உகந்து.*

**உரை :** வானத்தில் செல்லும் மேகக் கூட்டங்களாக, 20 வகையான மேக நோய்கள், உடலில் உண்டாகும். வாதம், பித்தம், கபம் என்ற முக்குற்றத்தின் வழி, 20 வகைகளாகப் பிரித்துள்ளார்கள் முனிவர்கள். உலகம், பிரமேகநோயிலிருந்து விடுபட்டு, மகிழ, இவற்றை விரித்துக் கூறியுள்ளார்கள்.

**குறிப்பு :** பிறவியில் ஏற்படும் மனக் குற்றங்களாகிய ஆணவம், கன்மம், மாயை என்பனவற்றையும் உடற் குற்றங்களான வாதம், பித்தம், கபம் என்பன மிகுதியும், குறைதலுமாகிய நிலையையும், உடலிலிருந்து வெளியேறும் மலம், சிறுநீர், பீளை, எச்சில், விந்து போன்றவற்றாலும் 'மலவுடல்' எனப்பட்டது. 'அங்கமது எண் சாணின் மலத்தின் கூடு' என்று அகத்தியர் அந்தரங்க தீட்சாவிதியில் பாடல் 70 இல் வருவதைக் காணலாம்.

---

★ சு.எண்: 127

2. *வடகலை தேர்ந்த தென்றல்*
*மலையமா முனிவன் சொன்ன*
*திடமுறு தமிழினாலே*
*தெரிந்திந்த வகையை ஓர்ந்தே*
*இடமுனள மேகக் கூட்டம்*
*இகல்செயும், கிரிச்சி, ரங்கள்*
*அடவுடன் அறிய வேண்டி*
*அகிலம துரைக்க லுற்றேன்.*

**உரை** : மலையமா முனியவராகிய அகத்தியர் வடமொழியை நன்கறிந்தவர் ஆவார். அவர், தமிழில் மேக நோய்கள் பற்றியும், உயிருக்கு ஊறு செய்யும் சிறுநீரக நோய்கள் குறித்தும், விளக்கமாக , உலகில் உள்ள மக்கள் வாழ, துணிவுடன் நூல் வடிவில் செய்துள்ளார்.

3 *மேகத்தின் உற்பவமும் கிரிச்ச ரத்தின்**
*உற்பவமும், விளங்கக் கூறின்*
*தாகத்தின் உற்பவமாம் இக கிரிச்சரம்*
*பூமிவாசி உரையோர் மூன்று*
*வேகத்தில் வந்த சுக்கில ... பரியும்*
*....ரச....ட..... வேணுமிரண்டும்*
*மோகத்தில் வளருமென இருவகையும்*
*தேர்ந்தெடுத்து, முனிவன், சொன்னான்.*

**உரை** : பிரமேக நோயின் தோற்றம், சிறுநீர் நோய்களின் தோற்றம், என்பன பெண்களின் மீதுகொண்ட ஆசையால் ஏற்படும் என்று இவ்வுலகில் வாழும் மக்களுக்கு எடுத்துரைக்கின்றார். அடிப்படையான காரணிகளை இங்கு விளக்குகின்றார்.

---

* இப்பாடல் செம்மையாக இல்லை.

4. நீரிழிவு பற்றுவதின் காரணத்தை
நீனிலத்தில் நிகழ்த்தக் கேளீர்
சீருலவு பதார்த்தமிகுத் தருந்தலினால்
விழுத்தடிகள், தின்று நாளம்
சேருதலால், சிறுவழுது ணங்காயைப்
பொசித்தலால் தண்ணீர்ப் போத
வாரியருந், தலினாலும், உவர்த்தரை நீர்,
பலநாளும், அருந்த லாலும்,

5. பசிவேளை நீங்கிஉண வருந்திடலால்
(ஸ்)தீரிபோகப் பற்றி நாளும்
முசியாது செய்கையால் உடம்பிலழல்
மிகுதிலினால் முன்செய் கன்மம்
கசிவாகிச் சேர்தலினால் உடம்புமிகத்
தூலமாய்க் காண லாலும்
நசியாமல் மனத்திலுற்ற பதார்த்தலிரும்
புதலாலும் நாடுந் தானே.

6. நாள்தோ றன்னம் மறுத்திடலால்
நாணக் குழலார் மேலாசை
வேள்தான் வருத்த இரவுபகல்
விரும்பல் செயலால், மிகுமுழலை
கள் சேர், நெஞ்சு, தனையலர்த்தி
காயம், உதிரங், கருதிடலால்
தாழ்வே செய்யும் மூல அங்கி
நிலைபேர்ந், துடல்மேற், சார்ந்திடுமே.

**உரை :** நீரிழிவு தோன்றுவதற்கான உலகில் வாழும் மக்களுக்குக் காரணத்தை கூறுகின்றேன். மாப்பண்டங்களை மிகுதியாக உண்பதாலும், பச்சையான ஊண் உண்பதாலும், கத்திரிக்காய் புசிப்பதாலும், மலினமான நீரை அருந்தலாலும் (உப்புநீரை) பசி எடுக்கும் போது உண்ணாமல், பிறகு உணவு உட்கொள்ளுதல், நாள்தோறும் பெண்களின் உறவு, வெப்பம்

அதிகரித்தல், முன்னோர்களின் கன்மம், உடல் பருத்து காணப்படல், அதிக உணவுவகைகளை விரும்பி உண்டல், என்பனவற்றாலும், உணவை வெறுத்து, பெண்களின் மேல் மயக்கம், காமத்தின் தலைவனான மன்மதன் வெறுக்கும் படியாக, கலவியில் இரவு, பகல் எந்நேரமும் ஈடுபடுதல் ஆகியவற்றாலும் மார்பு, உடல், இரத்தம் என்பன வற்றி, உடலைச் சார்ந்து நோய் காணப்படும்.

**விளக்கம் :** 4,5,6 ஆகிய பாடல்களில் சிறு நீரக நோய்கள் சலவாசயம்) தோன்றும் காரணிகள் பொதுவாகக் கூறப்படுகின்றன. இதில் கல்லடைப்பு போன்ற சிறுநீரக நோய்கள் பிரமேக நோய்கள், நீரிழிவு நோய் என்பன அடங்கும். உப்புக் கலந்த நீர் பாதரசம் கலந்த நீர் என்பனவற்றால் சிறு நீரகம் கெடும். பருமனான உடல், முன்னோர்களுக்கு நீரிழிவு இருத்தல், பிறவி உடற்கோளாறுகளாலும் நீரிழிவு நோய் ஏற்படும். நோயுள்ள பெண்களிடம் சேருவதால் வெள்ளை, வெட்டை, கிரந்தி நோய் எனபன தோன்றும்.

நீரிழிவு நோய் அன்னமய கோசம் நன்னிலையில் செயல் படாத நிலையில் உண்டாகும். நன்நிலையில் சர்க்கரை அளவு 100 மி.லி. / 80 முதல் மி.கி. ஆகும். 180 மி.லி. அதிகம் காணும்போது சிறுநீரில், சர்க்கரை சத்து வெளியாகும். இதுவரை இரத்தத்தில் சர்க்கரை என்ற நிலையில் காணப்படும். அண்மையில், இன்சுலின் என்ற நொதியின் பற்றாக் குறையால் இந்நோய் கண்டறிந்துள்ளார்கள். ஊசியின் மூலம் உடலில் செலுத்த, இந்நோய் தற்சமயம் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. உலகில் அரிசி உணவு உண்பவர்களுக்கே, இந்நோய் வரும் எனக் கண்டறிந்துள்ளனர். சிறுவயது உள்ளவர்களுக்கும் இந்நோய் வரும் வாய்ப்பு உள்ளது.

7. *அக்னியே, முதலாகிய, ஐம்பூதத் தாலுடம்பாம்*
*அக்னியே ஆதாரம் மூலத்தி லமர்ந்திருந்தே*
*அக்னியாற் பாகமதாம் அன்னமுத லருந்துவதும்*
*அக்னியே மிகுதல் விளைந்த வியாதிக்கும் ஆலயமே.*

உரை : ஐந்து வகையான பூதங்களாலான இவ்வுடலில், தீயே முதல் பொருளாக வைத்து எண்ணப்படும். தீயே அனைத்து செயல்களுக்கு, இயங்குவதற்கு அடிப்படையானது. தீ என்ற பித்தம் வெப்ப சக்தியாக மாறி அன்ன ரசம் தோன்றுவதற்குக் காரணமாக விளங்கும். பித்தம் அதிகரித்தால் நோய்கள் தோன்றும்.

8. *அங்கியால் வாதம் மீறும்*
*அதற்குமேல் பித்தம் சாரத்*
*துங்கிமாம் சேத்துமத் தானும்*
*சூழ்ந்திடும் தொகுதி யாகத்*
*திங்களும் அரவும் சூடும்*
*சிவனருள மருத்துவ நூலால்*
*பொங்கிய கலைதேர் மிக்கோர்*
*அறிந்திதைத் தீர்ப்பார் பூவில்.*

**உரை :** பித்தம் என்ற தீயானது உடலில் அதிகரிக்க வாதம் என்ற காற்று அதிகரிக்கும். இதில் பித்தம் சேர, கபம் என்ற நீர்த்துவம் சூழ்ந்திடும். முக்குற்றங்கள் தன்னிலை மீறுவதால் நோய்கள் ஏற்படும். தலையில் பிறையையும், உடலில் பாம்பையும் சூடியுள்ள சிவபெருமானின் அருளால், இவற்றை மருத்துவர்கள் போக்குவார்கள். முக்குற்றங்களின் இயல்பானநிலை வாதம் 1, பித்தம் ½, கபம் ¼ என்பதாகும். பித்தம் அதிகரித்தால், தன்னிலை கெட்டு, நோய்கள் ஏற்படும். பித்தம் அதிகரிப்பதால் உடல் வெப்பம், என்பு சுரம், வெப்பவாயு, அதிசாரம், கிறுகிறுப்பு, பைத்தியம் என்ற மனநோய்கள், சோபை, பித்த எரிவு, பிரமேகம், உடல் உலர்தல், உடல் வெளுத்துப்போதல், ஊதல் நோய், ஈளை, இருமல், காமாலை, வாந்தி, வாய் நீர் ஊறல், வாய்க்கசப்பு, வாய் வெந்து புண்ணாதல், நடுக்கம், தலைவலி, முகம், விழி, நா, பல், சிறுநீரில் மஞ்சள் மற்றும் சிவப்பாய் போதல் என்ற நோய்கள் ஏற்படும். இரத்தக்கொதிப்பும் (Hypertention) ஏற்படும்.

**விளக்கம் :** சிவன் என்று குறிப்பிட்டதில் நயத்தைக் காணலாம். சிவன் அழிக்கும் கடவுள், இயமனும் (மிருத்) உயிரை எடுக்கும் கடவுள். சிவன், இயமனை மார்க்கண்டனுக்காக விரட்டி, உயிர்காத்த புராணக்கதையை ஒட்டி இப்பாடல் வரிகள் அமைந்துள்ளன. தன்னைநாடிய நோயாளிகளின் உயிரை, மருத்துவர்கள் காப்பாற்றுவார்கள் என்பது உட்பொருளாகும். இதனால் இந்நூலாசிரியர் புராண வழக்குகளை நன்கறிந்தவர் என்பதும்புலனாகும்.

9. *அக்கினியால் மேகவிரதம் இருப துண்டாம்*
*அகுதன்றிக் கிரிச்சரமும் இருப தாகும்*
*புக்கவிதன் குணாகுணங்கள் வகுத்துக் கண்டாய்*
*புகலரிய சோதனைகள் பொருந்தக் கூறின்*
*தக்கவர் சொல் மேகமதில் வாதக்கூறு*
*சாற்றிடில் நான் கென்பார்பித்தம் தன்னின் கூறு*
*மிக்கஓ ராறுஆகும் ஐயின் கூறு*
*விண்டுரைக்கின் பத்தென்பார் மேன்மை யோரே.*

**உரை :** மேக நோயில் 20 வகைகள் உள்ளன. இது தவிர சிறுநீரக நோய் 20 வகைப்படும். இவை கிரிச்சரம் என்றழைக்கப்படும். மேக நோய் ஏற்பட, தீ பூதம் அடிப்படைக் காரணியாகும். இதன் இயல்புகளைப் பிரித்து, அறிந்து கூறினார்கள். மருத்துவ அறிஞர்கள், வாதக்குற்றத்தால் 4ம், பித்தத்தால் 6ம், கபத்தால் 10 என்று வகைப்படுத்தியுள்ளார்கள்.

10. *வாதத்தால் வந்த நாலும்*
*மணிமந்திர மருந்தில் மீளாது*
*ஏதித்தே உயிரைப் போக்கும்*
*இயம்பிய பித்தந் தானும்*
*சோதித்தே மருந்து செய்யின்*
*துறந்திடும் வறுமை பத்தும்*
*நீதத்தால் உடலோ டொன்றி*
*நின்றும்பின் நீங்குந் தானே.*

**உரை :** காற்றின் வகைகள் 4 ஆகும். இது மணி, மந்திர, மருந்து என்ற மூன்று வகையாலும் தீராது. இந்நோய் வந்தால் அது உயிரைப் போக்கும். தீயின் வகைகள் 6 ஆகும். ஆய்வு செய்து மருந்துகள் தர நீங்கும். நீரால் ஏற்படும் வகைகள் 10 ஆகும். இதிலுள்ள சில மந்திர, மருந்து, மணிகளால் தீரும். ஏனைய உடலில் நீங்காது.

*11. வாதத்தால் வருவ நான்காம்*
*மருவிய பித்தத்து ஆறாம்*
*பேதித்த சேத்துமந் தன்னில்*
*பத்தெனப் பிரித்துக் கூட்டி*
*நீதத்தால் இருப தென்று*
*நிலத்தினில் உரைத்தார் முன்னாள்*
*போதத்தால் அருளைக் காணும்*
*புராதன முனிவர் தாமே.*

உரை : காற்று என்ற வாதத்தால் வரக்கூடியவை 4, பித்தம் என்ற தீயால் வரக்கூடியவை 6, கபம் என்ற நீரால் வரக்கூடியவை 10 என்று வகுத்துள்ளார்கள் பழைய மருத்துவ வல்லார்கள்.

*12. வாதத்தால் வந்த நாலு*
*வகையினை வகுத்துக் கூறின்*
*சோதித்த கரப்பான் என்றும்*
*தூதறு பிரமன் என்றும்*
*வேதித்த நாய னென்றும்*
*விடக்கின முறுக்கி என்றும்*
*சூதொத்த முலையி னாளே*
*சொற்றரை மூவர் தாமே.*

**உரை :** வாதம் என்ற காற்றால் ஏற்படும் நான்கு வகைகள். கரப்பான், பிரமன், நாயகன், முறுக்கி என்பனவாகும்.

13. நாலினில் கரப்பான் மேகம்
நறு நெய்போல் நாறும் சீலை
கோலிலே திரித்துத் தீயில்
கொளுத்திடச் சுடரே மீளும்
வாலிதாம் பிரமன் மேகம்
வகையது மாங்கிசன் தன்னை
சோலியாக் கழுவு நீர்போல்
தோன்றிடும் என்றார் தூயோர்.

**உரை :** கரப்பான் மேகத்தின் இயல்பு. நறுமணமிக்க நெய்யை ஒத்திருக்கும். ஒரு குச்சியில் திரியை வைத்து, சிறுநீரில் தோய்த்துக் கொளுத்திப் பார்க்கவும். நெய்யின் மணம் வீசின், இது கரப்பான் மேகம் என்றறியலாம். பிரமன் என்ற மேகத்தின் இயல்பு. இறைச்சியைக் கழுவிய நீர்போலக் காணப்படும் என்று தூயமனத்துடன் மருத்துவத் தொண்டாற்றும் அறிஞர்கள் கூறினார்கள்.

14. தூயனென் றுரைக்கும் மேகம்
சொல்லிற்கோ மூத்திரம் நாறும்
நேயமாங் கிசமு றுக்கி
நிகழ்தக நிணத்தைத் தீயில்
காயவதைத் திடும்போ துள்ள
நாற்றமாம் காய்ச்சித் தீபம்
ஓய்விலா தெற்றி லுண்
டுண்டிடில் கருப்பஞ் சாறாம்.

**உரை :** இதன் பண்பு, பசுவின் நீர்போலக் காணப்படும். குச்சியால் திரியைச் சுற்றி சிறுநீரில் தோய்த்துக் கொளுத்தி விடவும். பசு நீரின் நாற்றம் உண்டாகும். முறுக்கியின் இயல்பு, இறைச்சியைத் தீயிலிட்டால் எழும் நாற்றத்தை ஒத்திருக்கும். சுவையானது கருப்பஞ்சாற்றை ஒத்திருக்கும்.

**விளக்கம் :** பாடல்கள் 13, 14 ஆகியவற்றில் சிறுநீர் ஆய்வு முறைகள் கூறப்பட்டுள்ளன. "எண்வகை தேர்வு" எனப்படும் ஆய்வுமுறைகளில் சிறுநீர் ஆய்வும் ஒன்றாகும். நீர்க்குறி, நெய்க்குறி எனப்படும். இம்முறைகளால் நோய் இன்னதென்று அறியமுடியும். சிறுநீரின் வண்ணத்தைக் கொண்டு நோய்களைக் கண்டறியும்முறை சித்தர்களின் நூல்களில் உள்ளது. தேரனின் நீர்க்குறி, நெய்க்குறி நூலைச் சான்றாகச் சுட்டலாம். இங்கு சிறுநீரில் தோய்த்து என்பதற்குப் பதிலாகப் புண்களிலிருந்து வடியும் ஊண் நீர் என்பதே பொருத்தமானதாகும்.

15. *வாதத்தால் வந்த நாலு*
*மணிமந்திர மருந்தில் லோகத்தி*
*ஏதத்தால் உயிருக் கீனம்*
*உற்றிடும் பித்தந் தானும்*
*சோதித்தே பிரயோ கங்கள்*
*துய்த்திட மாறு மெங்க*
*போதத்தால் வந்த சிலேத்துமம்*
*பத்துக்கும் பிழைவா ராதே.*

**உரை :** வாதவகை மேக நோய்கள் 4 மணி, மந்திர, மருந்தால் தீரும். பித்த வகைகள் 6 ஆய்வு செய்து மருந்துகள் தர நீங்கும். கபத்தால் உண்டான 10 வகைகளும் பிழையில்லாமல் மருத்துவம் செய்ய விலகும்.

16. *சொல்லிய பித்தத் தாறாய்*
*தோன்றிய மேகந் தன்னை*
*வல்லைநேர் முலையாய் அப்பியம்*
*விளங்டு பிரமியத் தோடு*
*நல்மகாரப் பிரமந் தானும்*
*நவில் மதி பிரமந்தானும்*
*வல்லதாம் சாத்தியத் தோடும்*
*ஆறுமென் றுரைப்பா ரன்றே.*

**உரை :** பித்தவகை பிரமேகங்கள் 6 வகைப்படும். உயிரைப் போக்கும் 6 வகையான பித்தப்பிரமேகங்கள் தீரும் என்று அறிவுள்ள மருத்துவர்கள் அறிவார்கள்.

17. *ஆறினில் அப்பிய மேகம்*
*அதுசலங் கழியும் போது*
*கூறிய குடோரி யானை*
*மதமெனக் குழுமி நாறும்*
*தேறிய பிரமிய மேகம்*
*செப்பமாய்க் கழியும் போது*
*நாறுகத் தாழைஞ் சாரம்*
*வீசுமென் றுரைத்தார் நல்லோர்.*

**உரை :** பித்தத்தால் ஏற்பட்ட 6 வகையான பிரமேகத்தில் அப்பிய பிரமேகத்தில் சிறுநீர் கழிக்கும்போது நாற்றம் மதயானையின் மத்தக நீரை ஒத்திருக்கும். தேறியப் பிரமேக நோயாளியின் சிறுநீர் நாற்றம் கற்றாழை நாற்றத்தைக் கொண்டிருக்கும். இவ்வகையான நாற்றங்களைக் கொண்டு பிரமேக வகைகளை அறியலாம். இங்கு கூறப்பட்ட நோய்களின் தன்மைகளை நோக்க மதுமேக நோய் என அறியலாம். பிரமேகம் என்று எழுதியது ஏடு எழுதியோரின் பிழையாதல் கூடும்.

18 *வருமகா பிரம நீர்தான்*
*சுண்ணம் பழம்போல் நாறும்*
*பொருமுநீர் விடுமி டத்தில்*
*பொருந்தியும் எறும்பும் ஈயும்*
*தருமதுப் பிரமிய மேகம்*
*சலம்பல பண்பாய் ஓடி*
*உருமுடன் வரும்விண் ணீர்போல்*
*உருக்கியே கழியும் காணே.*

**உரை :** மகாப்பிரமி என்ற மேக நோயில் இறங்கும் சிறுநீரானது சுண்ணாம்பழம்போல நாறும். இந்நீரில் ஈ, எறும்பு போன்றவை மொய்க்கும்படியாக இனிப்புச்சுவையுடன் இருக்கும். மதுப்பிரமியத்தில் நீரானது இயல்பாக வெளியாகும். மழை நீர்போல் சத்துக்களைக் கரைத்தும், அரித்துக்கொண்டும், உடலில் உள்ள வன்மையைக் கெடச்செய்யும்.

*19 காணுநீர் சாற்றிய மேகம் (சாதி)*
*கழிர்திடில் தாழை வீழ்து*
*தோணவே புளியும் நீர்போல்*
*தோன்றிடும் முடங்கு நாறும்*
*நீணிலப் பிரமேகம் நவின்றிடில்*
*முயலிரத்த தம்போல் நாறும்*
*பூணிய புலால் வழும்பு*
*பொருந்தியே நாறு என்பார்.*

**உரை :** சாற்றிய மேகம் இனத்தால் பித்த வகையாகும். இது தாழைச் சாறு நாற்றத்தைக் கொண்டிருக்கும். சிறுநீர் புளி கரைத்த நீர்போல வண்ணமுடனிருக்கும் நாநிலப்பிரமேகம் முயல் இரத்தம்போல வண்ணமும் நாற்றத்தையும் உடையதாகும்.

*20. என்றிடும் ஆறும் பித்தத்து*
*எடுத்ததென் றறிய லாகும்*
*கன்றிய இதுதான் தோன்றில்*
*காலத்தின் மூழ்கில் மீளும்*
*அன்றியும் இதுதான் போக்கும்*
*வாய்த்தாதாய் அடுத்து நிற்கும்*
*மன்றலங் குழலாய் கேளாய்*
*மறைமுனி வாக்க தாமே.*

**உரை :** மேற்கூறியவைகள் ஆறும் பித்தத்தால் ஏற்பட்டவை. பெண்ணே, இவற்றை மறைவாக கற்றுணர்ந்த முனிவர்கள் கூறினார்கள். இவ்வகைகளான மேகநோய்களை தக்கபடி காலத்தே மருத்துவம் செய்ய நீங்கும்.

**குறிப்பு :** "மறை முனிவர்" என்று இரகசியமான குழு உக்குறிகளை வைத்து மருத்துவச் சொற்களடங்கிய நிகண்டுகளைக் கற்றுணர்ந்தாலும், இரசவாதம், சாலம் போன்றவைகளைக் கையாண்ட தன்மைகளாலும் கூறப்பட்டார். வெளிப்படையாக இவற்றை எல்லா மாணவர்களுக்கும் கற்றுத்தராமல், தக்கவர்களுக்கே கற்றுத் தந்ததால், மறைமுனிவர் எனப்பட்டார். இது ஓர் காரணப் பெயராதல் கூடும்.

21. *உதிரமும் கடுப்பும் உப்பும்*
*உவருடன் புளிப்பும் சால*
*சதிர்பெறும் நீல மாறும்*
*தலைதனில் பித்த மாகும்*
*எதிரிலா மருந்து கூட்டி*
*இடைவிடா திருந்து பார்க்கப்*
*பொதுமகள் அன்பு போலப்*
*போவதே ஆகும்.*

**உரை :** இரத்தமானது காரம், அதிக உறைப்பு, உப்பு, புளிப்பு என்ற சுவைகளால் நீலநிறமாக மாறும். தலையில் பித்தம் அதிகரிக்கும். நிகரற்ற மருந்துகளைத் தந்து, ஆய்ந்து பார்க்கவும். நோயானது, விலைமகளின் அன்பை ஒத்து விலகும்.

**விளக்கம் :** நோயானது விலைமகளின் அன்பிற்கு ஒப்பிடப்பட்டுள்ளது. பொருள் நீங்க, விலைமகள் விலகுவாள். மருந்துகளை உட்கொள்ள, நோயும் விலகும். மேலும், மேகநோய் தோன்ற விலைமகளிரும் காரணம் என்பதையும் குறிப்பால் உணர்த்தியுள்ளார்.

## கபமேக நோயின் தன்மைகள்

22. சேட்டுமம் தன்னில் உள்ள
பத்தையும் தெரிந்து கூறின்
நாட்டுமுத் தமத்தி னோடே
பித்தம் நவிலின் இன்னம்
பூட்டுமாக் கியன்சு ராரி
புகன்றிடும் சுக்கில மென்பார்
சூட்டியின் பினானி என்றும்
சுனைமயி லென்று மாமே.

**உரை :** பத்து வகையான மேகநோய்கள் தோன்றக் கபம் அடிப்படையாகும். இதைப்பற்றித் தெரிந்துகொள்ளக் கூறுகின்றேன். பித்தம் பற்றி மேலும் கூறுகின்றேன். சுராரி, சுக்கிலம், பினானி என்று கூறுவார்கள்.

23. ஆமிலனந்தென்றும் . . . . . . .
அரைத்திடும் தைத்திய னென்றும்
காமனும் மருவும் மாதே
சிலேத்துமத் தீரந்தின் காட்சி
பூமியி லிதனுக் குள்ள
குணங்ககுறி பொருத்த மெல்லாம்
வாமமா முனிவன் முன்னாள்
தகையுடன் வகுத்த தாமே.

**உரை :** ஆமிலன், தைத்தியன் என்றும் . . . . . . . காமனும் விரும்பும் பெண்ணே, கபமானது 10 வகையாகத் தோன்றும். உலகில் உள்ளவர்களுக்கு மேக நோயின் குறி குணங்கள் என்பனவற்றை விளக்கமாக வாமமாமுனிவர் வகுத்து நூல் வடிவில் அளித்துள்ளார்.

24. வகுத்தஉத் தமரை மேகம்
வந்திடும் தெளிந்து நீராய்
தொகுத்துஅனல் காய்ச்சி னாலும்
சொல்லது பொல்லா நாற்றம்
வகுத்திடில் நிறமும் அந்த
பழையதி தமந்தான் தாழை.
உகுத்தநீர் இளநீர் போலே
நாற்றமும் நிறமும் உண்டாம்.

**உரை :** உத்தமன் என்ற மேகம் தெளிவாக வெளிவரும். இதைக் காய்ச்ச மிகவும் நாற்றம் வீசும். தாழையின் நீர், இளநீர்போல இதன் நிறமும், நாற்றமும் இருக்கும்.

25. ஆக்கியின் குணத்தைக் கூறில்
ஆமது மீன்பு லாலைத்
தாக்கியே கழுவும் நீர்போல்
நாற்றமும் நிறமும் சாரும்
தூக்கியே இருந்து நீரும்
துளித்திட இறுதி வீழும்
மாக்களுக் கினிய மாதே
மலைமுனி பகர்ந்த தாமே.

**உரை :** ஆக்கி என்ற மேகநோய், மீன், புலால் கழுவிய நீரின் நாற்றத்தையும், நிறத்தையும் கொண்டிருக்கும். சிறுநீர் துளித்துளியாகக் கெட்டியாக விழும். இவ்வாறு மலைய மாமுனியாகிய அகத்தியர், மக்களுக்குக் கூறியுள்ளார்.

26. சுராரியின் குணத்தைக் கூறில்
தோன்றி போல நாற்றம்
விராலிடும் சுக்கி லத்தால்
நுங்கின்சா றதுபோல் வீழும்

*துராலியம் புரட்டி மாவை*
*சுயற்றினில் கரைத்தாற் போல*
*அராவெனு மல் குலாளே*
*அறைந்தனர் முனிவர் தாமே.*

**உரை :** சுராரி என்ற மேக நோயின் பண்பு செங்காந்தாள் பூவின் நிறமும், பனை நுங்கின் நிறமும் உடையது. மாவைக் கரைத்தால் போன்ற வெண்மையாகி விடும் என்று மருத்துவ நூல் வல்லார்கள் எடுத்துரைத்தார்கள்.

27. *சொல்லிய பிணிசுண் ணாம்பு*
*ஊறிய நீராய்ச் சோரும்*
*அல்லதி நிறமும் அந்தப்*
*படிதாஞ் சனையி லாறும்*
*நில்லிடா தோடும் நீரை*
*நிலமடாக் கொட்டத் தாக்கும்*
*வல்லைநேர் முலையாய் வண்ணம்*
*தேற்றுநீர் மண்டி போலாம்*

**உரை :** கூறிய நோயில் சுண்ணாம்பு ஊறிய நீராக வெளியாகும். ஆஞ்சனை என்ற மேக நோயின் தன்மைகள் சேற்று நீர்போலக் காணப்படும். ஆறுபோன்று நிற்காமல் தொடர்ந்து சிறுநீர் வெளியாகும்.

28. *கருதிய லவண நீரும்*
*உவர்மண் கரைத்தாற் போல*
*வரும்அதி நாற்றம் வண்ணம்*
*மற்றது போலத் தோற்றும்*
*மருவிய தயத்தியாணந் தானும்*
*வாந்தியாம் வாத பித்தம்*
*செருமிய சிலேத்து மந்தான்*
*தொந்தமாய்ச் சேரு மன்றே.*

**உரை :** உப்புநீர், கடல் நீர் போலச் சிறுநீர் புலால் வாடையைக் கொண்டிருக்கும். இதன் வண்ணம் முந்திய நோயை ஒத்திருக்கும். இதயச் சூட்டால் வாந்தி ஏற்படும். வாத, பித்த, கபக்கூட்டால் முக்குற்றம் மிகுந்து கேடுகள் ஏற்படும்.

*குறிப்பு :* ஐயக்குற்றத்தால் 10 வகையான மேகநோய்களில் 4 மட்டுமே மூலபாடத்தில் உள்ளன. ஏனையவை காணப்படவில்லை.

29. *சேர்ந்திடும் மூன்றி னாலும்*
*இருபது வகையாய்ச் செப்பக்*
*கூர்ந்தநீ ரிழிவுக் குள்ள*
*குணமெல்லா உண்டு கண்டீர்*
*பேர்ந்திடு கர்ப்ப சோகம்*
*பெருமல(டு) எய்து மென்றே*
*ஒர்ந்துணர் முனிவர் கோமான்*
*உலகினில் உரைத்தார் என்றே.*

**உரை :** வாத பித்த கபமானது 1 : ½: ¼ என்ற விழுக்காட்டில் மிகுந்தாலும், குறைந்தாலும் மேகநோய்கள் ஏற்படும் நீரிழிவு என்ற மதுமேக நோயின் தன்மைகளைக் காணுங்கால். மலட்டு நோய் கருச்சிதைவு ஏற்படுதல் என்பனவும் ஏற்படும். இவ்வாறு மக்களுக்கு மருத்துவ வல்லவர் எடுத்துக் கூறினார்கள்.

### சிறுநீர்த்தடை நோய்

30. *மூத்திரக் கிரிச்ச மேகம்*
*தோன்றிய முறைகள் சொல்லின்*
*கூர்த்தறி கோசந் தன்னில்*
*அழலிடம் சந்தி தானும்*
*பார்த்திடும் மண்டைக் கீழும்*
*குதங்களில் பொரிந்த தன்றே*
*ஏந்திய எலும்பில் பற்றிக்*
*கொண்டுநின் ரகலும் காணே.*

**உரை :** சிறுநீர்த் தடை நோய் தோன்றிய காரணம், அன்னமய, மனோமய, பிராணமய ஆனந்தமய, விஞ்ஞானமய கோசங்கள் மனிதனுக்கு உண்டு. ஆனந்தமயகோசம், சலவாசயத்தில் கீழ்ப்புறத்தில் சூடு உண்டாகும். மலவாயில் பகுதியில், வாயகன்ற கீழ்ப்புறத்தில் எலும்புகளில் பற்றிக்கொண்டு, பின்னர் நீங்கும். "ஆனந்தமயக்கோசம்" என்பது இனப்பெருக்க உறுப்புக்களைப் பற்றிய மண்டலம் எனலாம். சிறுநீரை வெளியிடவும், கழிவுநீரை வெளித்தள்ளவுமான பகுதி.

31. *காணீர் மூத்திர வலியிருக்கும்*
*படித்தான கருதின் கீழ்நோக்கும்*
*நாணா முகத்தை உடையதுமாய்*
*நண்ணும் தீயநீர் வரும்படிதான்*
*கோணா துமக்கு உரைக்கின்றேன்*
*குறுக்கு மதுசீ தங்களுண்டாம்*
*வீணா தண்டு மும்முகமாய்*
*பத்தும் விட்டே வெதும்பிடுமே.*

**உரை :** அறிந்துகொள்ளுங்கள், சிறுநீர்ப் புழையில் வலி தோன்றும். சிறுநீர் பிரியுமிடத்தில் கயிறு போன்ற தோற்றம் உடையதாகும். தீமை செய்யும் சிறுநீர் பொருந்திவரும் படியானபடி உள்ள வகையினை, முகமாறுதல் இல்லாமல் விளக்கமாக எடுத்துரைக்கின்றேன். சிறுநீர் குறைந்துவரும், குளிர்ச்சியுடைய கள்ளை ஒத்துமிருக்கும். சிறுநீர்ப்புழை வெதும்பிக்காணப்படும்.

32. *வெதும்பி ஊமைக் குடம்போல*
*நீர்தா மூறி வீழும்நீருநின்ற*
*வாதபித்த சிலேத்துமம் அணுகுமாதலால்*
*எது மூத்திரமாம் வாதனையும்*
*துவாரத்தினையும் தானடைத்து*
*நிதம்ப மடவாய் நிறுக்குகையால்*
*மேக விதானந் தோன்றிடுமே★*

---

★ இப்பாடல் மிகவும் சிதைந்துள்ளது.

**உரை :** வாடிய சிறுநீர்ப்புழையில் சிறுநீர் வெளிவரும். இது முழுமையான அளவுடன் இராது. வாத, பித்த, கபம் என்பனவற்றால் இது ஏற்படும். சிறுநீர் துளையானது அடைபடும். வலி ஏற்படும் இவ்வாறு மேகநோயின்முகம் வெளிப்படும்.

*33.* *நேரும் மேகம் இருபதுடன்*
*நிகழ்ந்த மூத்திரக் கிரிச்சரமும்*
*சாரும் அதற்குக் குளிருண்டாம்*
*சற்றே கேளிர் சாத்திரத்தால்*
*ஓரும் பத்தா கப்பிறந்தே*
*ஒழுகும் மூத்திரக் கிரிச்சுந்தான்*
*பாரும் சன்னி தானுமைந்தாய்*
*குறியும் தோன்றிப் பற்றிடுமே.*

**உரை :** மேக நோய் இருபதும், சிறுநீர்த்தடை நோய் பத்தும் இணையும் மருத்துவம் பற்றிக் கூறுவதைக் கேட்கவும். இத்துடன் குளிர், மிகுசுரம் (சன்னி) என்பதற்கான அறிகுறிகள் தோன்றி, உடலைப் பற்றும்.

*34.* *பதறி விழும்நீர் பயமுமாய்*
*பல்கால் கழியும் மிகத்தோன்றி*
*விதிரும் பித்தத் தால்வந்த*
*மூத்திரக் கிரிச்சர விதம்சொல்லின்*
*சிதறி விழும்நீர் பொன்வண்ணமாய்*
*சீராய் நேராய் மஞ்சனிக்கும்*
*கதற ஊத்தி தானுண்டாக*
*கடுப்பும் ஒப்பாய் கழிந்திடுமே.*

**உரை :** அச்சம் அடையும் வகையில் சிறுநீர் பலமுறைத் தடைப்பட்டு வெளியாகும். கொடிய பித்தத்தால் ஏற்படும் சிறுநீர் நோய்களில், மஞ்சள் வண்ணத்தில் சிறுநீர் தடையின்றி வரும். ஆயின், சிறுநீர் வெளியாகும்போது கடுப்புடன் இருக்கும்.

35. *கழியுமது . . . . . தானுமதோய்*
*கழிந்து தானும் நயப்பற்றாம்*
*ஒழியா சிலேத்து மத்தால்வந்*
*துரைத்தில் சன் மரணக்குறி*
*வழியா அண்டந்தாங் கனத்து*
*வீங்கி யிருக்கும் வழுவழுத்து*
*துளிபோல கட்டுப்பட்டிருந்து*
*கழியும் சிலேத்துமம் சொல்லுங்காலே.★*

**உரை :** கபத்தால் ஏற்படும் சிறுநீரக நோயில் குளிர்ச்சி, மரணத்திற்கான அறிகுறிகள் காணப்படும். விதைகள் கனமாகவும், வீக்கமுடனும் இருக்கும். சிறுநீர் சொட்டுச் சொட்டாகவும், வழுவழுப்புடனும் பிரியும். இது கபத்தால் ஏற்பட்டது என்று உணரலாம்.

36. *சொல்லின் இந்த மூன்றுவகைச்*
*சிலேத்துமப் பித்தத் துடன்வாதம்*
*(சொல்லும்) விளைந்த கிரிச்சரமாம்*
*தோடம் தோன்றிப் பின்னதனில்*
*கல்ல ளைக்குச் சன்னியினில்*
*காணில் குரோச முடன்பொல்லா*
*அல்லும் பகலும் கலந்துபிறந்து*
*அமரும் கோசத் தடித்தலத்தில்.*

**உரை :** மூன்று வகையான சிறுநீரக நோய்களில் வாதத்தில் குற்றம் தோன்றும். இது பெருகி, சன்னி என்ற முக்குற்றமாக மாறும். இரவு, பகல் என்றில்லாமல் ஆனந்தமய கோசத்தின் உட்பகுதியில் கலந்து தோன்றும்.

37. *கோசத் தடியில் (ம)கலிணங்கள்*
*கூடிச் சோரும் வாதத்தாலும்*
*பேசப் பட்ட வாதத்தால்*
*பித்தம் சிலேத்துமம் சுக்கிலத்தால்*

---

★ இப்பாடல் சிதைந்துள்ளது.

தோசத் தொகுதி தான்கூடித்
தோடம் பார்த்த பிறகும்என்
வாசப் பொதிய மலைமுனிவன்
வகுத்தே கல்லின் பிரிவுரைப்பான்.

**உரை :** மணம் வீசும் பொதிகைமலை வாழ் அகத்தியர் கல்லடைப்பு நோய் பற்றிய விளக்கங்களைத் தருகின்றார். சிறுநீர் மண்டலத்தில், நோய்கள் குற்றங்களால் ஏற்படும் வாதம், பித்தம், கபம், விந்து என்பனவற்றால் உண்டாகும் நோய்களை ஆய்ந்து, மதிப்பிட்டுக் கண்டறிந்துள்ளார்.

38. உரைப்பான் கோசத் தடிநொந்து
கடுக்கும் புண்போல் உளைந்திருக்கும்
விரைப்பாய் வந்த மூத்திரமும்
துருவை மூத்திர மெனவீசும்
தலைப்பால் நாளும் கலந்தெரிக்கும்
தண்மை யன்றி வெதுப்புண்டாம்
கரைப்பாம் உட்டினம் மிகவுண்டாம்
கல்லின் தோடம் இதுதானே.

**உரை :** உறையின் கீழ்ப்புறம் வலியுடன் கடுக்கும் புண்போல் மிகவும் வருத்தமடையச் செய்யும். வேகமாக வெளிவரும் சிறுநீர் செம்மறி ஆட்டுச் சிறுநீரை ஒத்திருக்கும். அதன் நாற்றம் வீசும். பலமுறை எரிச்சலுடன் வெளியாகும். உடல் சூடும், வெப்பமும் அதிகமாகும். கல்லடைப்பு நோயின் இயல்பாகும்.

39. இதுவே கல்லின் தோடமதை
இயம்பக் கேளீர் கொப்புளையும்
பதியாம் சீவ நிலைதனையும்
பதறப் பதறச் சிவ்சிவ்என்று

*அதிக மாக மிகநோகும்*
*அந்த நொந் துவாரத்தை*
*விதியாம் கல்லும் வந்தடைந்தால்*
*மெள்ள மெள்ளச் சிலிர்ந்துவிழும்.*

**உரை :** கல்லடைப்பு நோயின் தன்மைகளைக் கூறுகின்றேன், கேளுங்கள். தொப்புள், பிறப்பு உறுப்பில் கடுமையான வலி, சிறுநீர் சிறிது சிறிதாக வெளிவருதல் என்பனவாகும்.

40. *சிலித்து சிலித்து விழும்நீரில்*
*சேர்ந்த கல்லும் நீங்கினக்கால்*
*வலித்து வரவர தெளிந்ததுவும்*
*தாரைப் படநீர் வந்துவிழும்*
*கலித்த சுக்கிலம் வாதபித்தம்*
*சிலேத்துமங் கூடிக் கட்டுவது*
*ஒலித்த சுரும்பார் உழல்மடவாய்*
*உரைப்போம் இன்னம் உண்மைகேளே.*

**உரை :** சிறுநீரைத் தடைசெய்யும் கற்கள் நீங்கினால் வலி குறைந்து, சிறுநீர் தெளிவுடன் வெளியாகும். விந்து என்பது முக்குற்றங்களான வாத, பித்த, கபத்தால் ஏற்படுவது ஆகும். வண்டுகள் ஒலிக்கும் மலர்களைச் சூடிய பெண்ணே! இந்நோய் பற்றி மேலும் கூறுகின்றேன்.

41. *உண்மை யாகும் வாதத்தால்*
*உதித்த மூத்திர வாதையதை*
*தண்மை யின்றி நொந்துபல்லை*
*தான்நெ ருக்கிக் கடிப்பவர்போல்*
*வண்மை யுடைய தன்னுடம்பை*
*மறிய நடுக்கும் இடைபுரளும்*
*திண்மை கோசத் தொப்புளையும்*
*கையால் பிசையச் செய்விக்கும்.*

**உரை :** வாத குற்றத்தினடியில் ஏற்படும் கல்லடைப்பு நோயில் வலி கடுமையாக இருக்கும். பல்லைக் கடிக்கும்படி தீவிரமானதாகக் காணப்படும். வலிமையான உடல் அறிந்து நடுங்கும். இடுப்புப் புரளும்படி இருக்கும் ஆண்குறி, விதைகள், தொப்புள் போன்ற உறுப்புகளைக் கைகளால் அழுத்திப் பிசைவார்கள்.

**கிரிச்சர உற்பவம்**

42. *செய்த வாயால் முக்காலும*
*தியா மல்அதைப் புலப்படுத்து*
*மெய்தான் நோகப் பல்காலும்*
*துளித்துத் துளித்தே விழுந்திருக்கும்*
*வெய்தே யாகும் கலக்கருத்து*
*வெண்ணெய் போல முடைந்து*
*நொய்தே துவள்நுண் நுசுப்பணங்கே*
*வாத தோட நுண்மையிதே.*

**உரை :** வாத குற்றத்தின் நுட்பங்களைக் கூறுகின்றேன். பெண்ணே, கேட்கவும். அழுத்திப்பிசைவதலாகிய செய்கையால், எதையும் பொருட்படுத்தாது வலியை எப்போதும் பிறருக்குத் தெரிவிப்பார்கள். உடலைப் பலமுறை நோகச் செய்து, துன்புறுத்தும் சிறுநீரானது சொட்டுச் சொட்டாக வெளியாகும். வெண்ணைய்போல் சிறுநீரில் வழவழப்பான பொருள் சேர்ந்துவரும்.

43. *நுண்மை யாகும் பித்தமதில்*
*பிறந்த கல்லின் மூத்திரத்தை*
*வண்மை யின்றி அடக்கின்றாம்*
*மறித்து மூத்திரத் திரிக்குள்ளே*

*திண்மை யாகத் திரண்டுநின்று*
*சலமு மற்ப மாய்க்கழியும்*
*உண்மை யிதுகாண் நொந்த . . . தி*
*உண்டாப் புளு முரைத்திடுமே.* ★

**உரை :** நுட்பமான பித்தத்தால் உண்டாகும் கல்லடைப்பு நோயின் தன்மைகள், சிறுநீரை அடக்கமுடியாமல் வெளியேறும் தன்மை, சிறுநீர்ப்பையில் திரிபோல உறுதியுடன் கல்லானது இருக்கும். சிறுநீர் சிறிது சிறிதாக வெளியேறும்.

44. *உரைத்தே அடக்கில் ஆண்குறியை*
*உண்ணி மூக்கில் நீடுவிடுகில்*
*இரைத்தே யிரையைப் போல்நிகழ்ந்த*
*. . . . கழியுமிவை கண்டால் . . .*
*திரைத்தேன் மொழியாய் பரிகாரம்*
*படாது கண்டாய் தெளிந்துரைக்கின்*
*விரைத்தே மூத்திரக் கிரிச்சக்*
*கல்லி லாதே விளங்குமங்கே..*

**உரை :** இவ்வாறு கல்லடைப்பைப் பற்றிப் பேசினேன். சிறுநீரை ஆண் குறியைப் பிடித்து, முக்கியபடியே நீட்டிக் கழிப்பார்கள். ஆண்குறியிலிருந்து சிறுநீர் மிக்க ஒலியுடன் வெளியேறும். இவற்றைக் காண மருத்துவம் பயனளிக்காது என உணரலாம். தேனின் இனிய சுவையை உடைய மேபெண்ணே, மேலும் கூறுகின்றேன்.

45. *விளம்பக் கேளாய் கல்பிறவா*
*தோயந் தன்னை விரித்துரைக்கில்*
*துளம்ப எரித்தல் கனத்தலோடு*
*தோன்றத் தமிர்த்தல் சிலத்துமாய்*

---

★ இதன் இறுதி அடி சிதைந்துள்ளது.

*தளும்பக் கடுத்து முக்குதல்கள்*
*செய்யாதே நீர்தான் துளிவிழுதல்*
*கொளும்பின் அசதி தனிவிழுதல்*
*உழத்தி யலுத்துக் குறிகாணல்*

**உரை :** சொல்லக் கேட்பாயாக, கல்லடைப்பு நோயின் குற்றங்களை எடுத்து விரிவாகக் கூறுகின்றேன். பருமனாகவும், எரிச்சலுடனும், சிவந்தும் இருக்கும். மனம் அலைந்து கடுப்புடன் முக்கி, சிறுநீரை துளித்துளியாக வெளியேற்ற வேண்டும். சிறுநீரில் சிறு நிணத்துண்டுகளும், கொழுப்புப் பொருட்களும் கலந்து வரும்.

46. *குறியே காணில் வெளுப்பினுடன்*
*சிவப்பும் ஓதச் சிறிதலும்போல்*
*விரிய விழுதல் பின்னையும்பல்*
*வகையாய்க் கழிதல் செய்திடுங்கால்*
*கிரிச்சிய ... நீர்க்கடுப்பாம் வெண்*
*மாசுரத்த யோனிச் சூலையென*
*விரிநீர் முத்திரக் கிரிச்சத்தின்*
*குணங்க ளனைத்தும் ஆரணங்கே.*

**உரை :** வெண்மையும், சிவப்புமான நிறங்கள் சிறுநீரில் வெளிப்படும். பின்னர், அதிகமாக சிறுநீர், நீர்க்கடுப்புடன் துன்பத்தைத் தரும். வெண்மையான ஆடை படிந்து வெளியாகும். இக்குறி குணங்கள் யாவும் யோனி சூலைக்கானவை என்று பெண்ணே அறியவும்.

47. *அணங்கே யிங்கே உரைத்ததெல்லாம்*
*ஆய்ந்து தெளிந்து பரிகாரம்*
*குணங்க ளறிந்தே அந்தந்த*
*தோடப் பகுதி குறித்தறிந்தும்*

இணங்கு மருந்தின் வாகடத்தின்
இனியவை அறிந்து செய்கவென
பணங்கொள் அரவி னகலல்குல்
பாவாய் முனிவன் பகர்ந்தானே.[1]

**உரை :** பெண்ணே ! சிறுநீரக நோய்பற்றிய எல்லாவற்றையும் எடுத்து ஆய்ந்தும், தெளிவுடனும், நீங்குவதற்கான வழிகளைக் கூறினேன். குற்றங்களால் ஏற்படும் நோய்களைக் குறிகுணங்களால் அறிந்து, மருத்துவ நூல்களில் கூறியபடி வகை தெரிந்து, வழங்கவும். பாம்பின் படத்தைக் குறியாகக் கொண்ட பெண்ணே! மருத்துவம் பற்றிய செய்திகளை உலகத்தோர் அறிய முனிவர் கூறினார்.

48. பகரும் மேகம் இருபதுக்கும்
பத்துக் கிரிச்சம் இருபதுக்கும்
இகலும் குணங்கள் வாகடத்தால்
இயல்பும் இன்னம் பலகுணங்கள்
சுகமே குயிலே சொலக்கேளாய்
சொல்லும் மேகம் இருபதுக்கும்
இகமேகக் குறியும் சோதனையும்
இன்னம் உரைக்கக் கேளாயே.

**உரை :** மதுமேக நோய் வகைகள் 20, சிறுநீர்த்தடை நோய் 10 என்று மருத்துவ நூல்களில் வகைப் படுத்தப்பட்டுள்ளன. மேலும், மேகநோய் 20 வகைகளையும், அதன் இயல்புகளையும் கூறுகின்றேன்.

49. கேளாய் மேகக் கிரிச்சிதங்கள்
இளநீர் தெளிநீர் கடுக்காய்நீர்
தாழை விழுது நீரதுபோல்
தால நேரங் . . . . கு தானது

*போலுனைத் தேங்காய் அழுகலும்*
*போலும் வரபோ தினம்போலும்*
*நீல வாழை நூல்போலும்*
*நேரி மூளை தனைப்போலும்.*

**உரை :** சிறுநீர்த்தடை நோயில் வரும் சிறுநீர், இளநீர், தெளிந்த தண்ணீர், கடுக்காய் ஊறிய தண்ணீர், தாழை விழுதின் சாறுபோல இருக்கும். அழுகிய தேங்காயின் இளநீர் போலவும், வாழைத்தண்டின் நூல் போலவும் வளைதலை உடைய மூங்கில் குறுத்துப் போலவும்[1]

**விளக்கம்:** வாழைத்தண்டும், மூங்கில் குறுத்தும் தண்டுக்கு ஒப்பாகக் கூறப்பட்டுள்ளது.

*50.* *மூளை யிரத்தங் கலந்ததுபோல்*
*முழுது மூத்திரம் தனைப்போலும்*
*கோளை உதைந்த நீரதுபோலும்*
*குறிக்கும் கல்லாய் மாங்கிசமாய்*
*நீளும் நரம்பு போலாகி*
*நிறமும் பல வண் ணமதாகி*
*வேளினஞ் சேனா பழிகாமெனும்*
*மின்னே மேகவியம்பிதுவே.*[2]

**உரை :** மூங்கில் முளையில் இரத்தம் சேர்ந்துள்ளது போல், சிறுநீரில் இரத்தம் கலந்துவரும். கல், இறைச்சித் துண்டுகள், நீண்ட நீளும் சிறுநரம்புகள்போல பலவித நிறங்களில் வெளியாகும்.

*51.* *உற்கமென் றுரைக்கும் மேகக்*
*குணந்தனை உகந்து கூறில்*
*சொற்பெரு தண்ணீர் போல*
*வாங்கும் சுடர்மேல் வைத்துக்*

1. இப்பாடலின் பின் இரண்டடிகளி சிதைந்துள்ளன.
2. இப்பாடல் சிதைந்துள்ளது.

*கற்கமாக் குவதுபோல் காய்ச்சி*
*கரண்டத்தில் குணமே நாறும்*
*நற்கலை உணர்ந்த மேலோர்*
*இப்படி நவில்கின் றாரே.*

**உரை :** பாம்பு என்று பேசப்படும் மேகநோயின் பண்புகளை மகிழ்ச்சியுடன் கூறுகின்றேன். கடல் நீரை வாங்கும் சூரியனைப்போல், தீயில் சிறுதுளி சிறுநீரைக் குடுவையிலிட்டுக் காய்ச்சவும், நீரானது திரட்சியுடன் நாறும். இவ்வாறு மருத்தவக் கலை உணர்ந்த பெரியோர்கள் கூறுவார்கள்.

52. *சுராரியென் றிலங்கும் மேகக்*
*குணந்தனைச் சொல்லுங் காலை*
*அராவிநீர்ப் பிழிந்து வீழும்*
*அலரிய கள்போல் நாறும்*
*விரவிய நுரைஉண் டாகும்*
*மிகுமிள நீர்போல் காணும்*
*தராதரம் தணல்மேல் காய்ச்சில்*
*சர்க்கரை போலா மன்றே.*

**உரை :** சுராரி மேகநோயின் தன்மைகள் உராய்ந்து, சிறுநீர் கள்போன்ற வெள்ளை நிறமுடன் வெளியாகும். கள்ளின் நாற்றமும் வீசும். சிறுநீரில் நுரையிருக்கும். இளநீர்போல இனிப்புச் சுவையும் உண்டு. சிறுநீரைக் காய்ச்சில் வெண்ணிறப் படிவங்கள் இருக்கும்.

53. *சனையிலென் றுரைக்கும் மேகக்*
*குணந்தனைச் சாற்றில் நீரும்*
*அனுதின மழியும் சின்னாள்*
*அமர்ந்திடும் அனல்மேற் காய்ச்சில்*
*புனமிரு காட்சி போலப்*
*பொருந்திப்பின் சூரை நாறும்*
*இனிமையார் மொழியாய் மேலோர்*
*இப்படி இயம்பி னாரே.*

**உரை :** சனை எனப்படும் மேகநோயின் தன்மைகள், நாள்தோறும் அதிகமாக வெளியாகும். சில நாட்களில் மாறுபடும். தீயிலிட்டுக் காய்ச்ச, சுரைக்கொடிச் சாறுபோல் நாறும். இனிமையான சொற்களைப் பேசும் பெண்ணே, மேலோர் இவ்வாறு கூறினார்கள்.

54. *இயம்பிடும் சிராக என்னும்*
*மேகத்தின் இயல்பு கூறில்*
*நயந்துஉற் றிருந்தா லுப்புக்*
*கரைத்த மணம்போல் நண்ணும்*
*பயஞ்சுடர்க் காய்ச்சி னாற்போல்*
*பாண்டத்தில் குறுகக் காய்ச்சில்*
*நியம்பரு லவண மென்ன*
*நிறந்தரும் என்ன லாமே.*

**உரை :** சிராகம் என்ற மேகநோயின் இயல்புகளாவன, மிக்க உப்புநீர் கரைத்த நாற்றம் போலிருக்கும். சிறுநீரை, வரையறை செய்து நேரப்படிக் காய்ச்சவும் பெருஉப்பு போன்ற வெண்மையான வண்ணத்தில் படிவுகள் இருக்கும் என்று கூறலாம்.

55. *இயனமென் றுரைக்கும் மேகம்*
*இடிக்கரைத் தாற்போல் காணும்*
*புலநீர் வழுவ ழுக்கும்*
*புலிங்கமே வைத்துக் காய்ச்சில்*
*தவனம்போ கடைக்காய்க் கேற்ற*
*சங்குவெண் சுண்ணாம் பாகும்*
*நவநிலைப் புந்தி யோர்கள்*
*அறிந்திவை நாடு வீரே.*

**உரை :** இயனம் எனப்படும் மேகநோய் காணப்படும் வகை, அழிகரையைப்போல் இருக்கும். உப்புநீர்போல வழுவழுப்பாகத் தோன்றும். தீயிலிட்டுக் காய்ச்ச, சங்குநிற

வெண்மையுள்ள சுண்ணமாகும். புதுமையான இக்குறி குணங்களால், அறிவுடைய மருத்துவர்கள் உடல்நிலை அறிந்து, மருத்துவம் செய்வார்கள். எனவே, தகுதி மிக்க மருத்துவர்களை மக்கள் நாடவேண்டும்.

56. *இம்மென் உரைக்கும் மேகத்து*
*இயல்பினை உரைக்கி லுப்பு*
*கம்மமில் கரைத்தாற் போல*
*கண்டிடு நுரையுண் டாகும்*
*சம்மதித்துண்டா ......ப் பதுஞ்*
*சாறுங் காய்ச்சில்*
*செம்மைசேர் ருளவு தள்ளிக்*
*கரைத்தமண் ஊறல் தேறில்*

**உரை :** மேகநோய் எனப்படும் தீயைப்பற்றி அழகாகக் கூறுகிறார். உப்பு வெண்மை இல்லாமல் மங்கி இருக்கும், சிறுநீர் நுரையுடனும் வெளிப்படும். சிவந்த சேற்றுமண் வண்ணத்தில் தீயிட்டுக் காய்ச்சச் சிறுநீர் இருக்கும்.

57. *அனுசரி என்னும் மேகம்*
*தண்ணீர் புலால்போல ... ருத்துளிபெரும்*
*அனல்மேல் காய்ச்சி லது*
*குழம்பியே இறுகி நின்று*
*மணந்த இறைச்சி நாறுமென*
*மிகுந்த தவத் தீர்*
*வனந்தனில் முனிவரெல்லாம்*
*தரணியோர்க்கு இயம்பி னாரே*[1]

**உரை :** அனுசரி என்ற மேகத்தின் தன்மைகள்: சிறுநீர் இறைச்சி கழுவிய தண்ணீர் போலிருக்கும் தீயில் காய்ச்ச இறைச்சியைச் சுடும். நாற்றம் எழும். காடுகளில் தவம்செய்த முனிவர்களான மருத்துவர்கள் உலக மக்களுக்குக் கூறினார்கள்.

---

1. இப்பாடல் சிதைந்துள்ளது.

58. *சுக்கில மென்னும் மேகத்*
*தொடர்விணைக் கூறில் நீரும்*
*மிக்கதாம் வெளுப்புண் டாகும்*
*வினவிலோர் நிறமும் மஞ்சள்*
*புக்கநீர் என்னத் தோன்றும்*
*புவிநடந் திடில் எரித்த*
*எக்கிரத்த மதாய் விழும்*
*காய்ச்சினால் இருப்பாம் பூச்சி.*

**உரை :** சுக்கிலம் என்ற மேக நோயில் தொடரும் குறி குணங்கள், சிறுநீர் மிகவும் வெண்மையுடனிருத்தல், உடலில் இரத்தம் குறைந்து மஞ்சள் நிறம் தோன்றுதல், தீயிட்டுக் காய்ச்ச இரும்பின் இரத்த வண்ணமாய் இருக்கும். சிறிது நுண்ணுயிரிகள் இருக்கும்.

59. *வினசுவென் றுரைக்கும் மேகக்*
*குணந்தனை விரிக்கில் நீளும்*
*தலைசுறும் அத்தி நாற்றம்*
*தானது வாகிப் பின்னும்*
*எண்பெருங் குதிரை நாற்றம்*
*உற்றுறைந் திடுதல் செய்யும்*
*கண்மதிப் புடையீர் பார்க்கில்*
*காய்ச்சினாற் போலக் காணும்.*

**உரை :** வினசு மேக நோயின் தன்மைகள் அதிகமாக இருக்கும். இவற்றைப் பேச நீண்டுகொண்டே போகும். சிறுநீர் குறைதல், என்பின் வாடையைக் கொண்டிருக்கும். சிறுநீரானது காய்ச்சப்பட்டால் அமுக்கிராக் கிழங்கின் நாற்றம் ஒத்திருத்தல் என்பனவாகும். இவற்றை மருத்துவம் செய்வோர் உணர்ந்து செய்யவேண்டும்.

60. குருதியென் றுரைக்கும் மேகம்
குணந்தனை வரிக்கில் நீளும்
நிரதியே பலகால் சாயும்
த . . . லே முளைநீர்க்கட்டி யிற்றுவிழும்
நுரையினைப் போலத் தோன்றும்
நாறிடும் நிறம்வே றாகும்
எரித்தடை நிறம்போல் தோன்றும்
என்றனர் முனிவர் தாமே.[1]

**உரை :** குருதி மேக நோயின் தன்மைகளை விரித்தால், நீண்டுகொண்டேபோகும். சிறுநீர் பலமுறை வெளியாகும். விதை போன்றவைகள் சிறுநீருடன் விழும். நுரையும், நைந்து நாற்றமும் இருக்கும். ஆட்டின் சிறுநீர் போலத் தோற்றமளிக்கும் என்று முனிவர்கள் எடுத்துரைத்தார்கள்.

61. சன்னியென் னுரைக்கும் மேகம்
தானது பலகால் சாய்ந்து
பின்னெடு கடுப்பெ ரிப்பும்
அதிக உட்ணம் பேசில்
நன்மைசேர் அனல்மேல் காய்ச்சில்
இரத்தம் போலிருந்தே நண்ணும்
தன்னையே அறிந்த மேலோர்
சாற்றினார் உலகில் தானே.

**உரை :** சன்னிமேக நோயின் தன்மைகளாவன பலமுறை வருத்தமடையும் வண்ணம் நீரானது வலியுடன் வெளியாகும். பின்னர் கடுப்புடன் எரிச்சல், சூடாக இருக்கும். சிறுநீரைக் காய்ச்சி ஆய்வு செய்யவேண்டும். சிறுநீர் இரத்த வண்ணமாய் மாறும். தன்னை அறிந்த மருத்துவர்கள், உலகில் உள்ள மக்கள் வாழ நல்ல மருந்துகளை ஆய்வுசெய்து அளிப்பார்கள்.

---

1. பாடலின் இரண்டாமடி சிதைந்துள்ளது

62. வெகுசலம் என்னும் மேகம்
மேகவிடில் சாகும் பித்தம்
நகளரி போலக் கைகால்
காந்திடும் நாள்தோ றன்னம்
மிகவுண்ணும் வாந்தி யுண்டாம்
மேனிபூ ரித்தே வற்றும்
தேக(ம்)வேறே வெளுக்கும் காயும்
துயர்பெறச் சின்னாள் பன்னாள்.

**உரை :** வெகுசலம் என்ற மேகநோய் பற்றினால் பித்தம் அதிகமாகும். நகத்தில் தீப்பற்றுவதுபோல எரியும். கைகால்கள் எரிச்சலுடன் இருக்கும். உணவு அதிகம் உண்ண விருப்பம் எற்படும். உடல் வீங்கும். பின்னர் மெலியும். உடலில் இரத்தம் சுண்ட வெள்ளை நிறமாகும். சில நாட்கள் துன்பம்தந்து, பின்னர் மரணத்தைத் தரும்.

# பிரமேகம்

## (எய்ட்ஸ் நோயின் விளக்கமுடன்)

63. *மாதருட மாமையலால் மாமிகுதி தெண்டிப்பால்*
*சேத முறவருநோய் தேடியே - ஆதரவில்*
*வந்துநொந்து மெள்ள வளரும் பிரமியங்கள்*
*சிந்தைதனில் காண்பார் தெளிந்து.*

**உரை :** பெண்கள் மீதுள்ள மிகு விருப்பத்தால் சேதத்தைத் தரும் மேக நோய் வரும். நோயுற்றப் பெண்களுடன் உறவைத் தேடவே அவர்களின் கூட்டால் வரும். வந்த பின்னர் நோகச் செய்யும். பின்னர் மெதுவாக வளரும். இவற்றைத் தெளிவாக ஆய்வுசெய்ய மருத்துவர்கள் அறிவார்கள்.

64. *வந்து மிகுந்து வளரும் பிரமியத்தால்*
*முந்தவினை யாக முளைக்குமே - பிந்தவே*
*அண்டமெனும் சூலை அதுவும் பவுத்திரமும்*
*உண்ட தெனவே உரை.*

**உரை :** நோயாளியைப் பற்றிய மேகநோய் தக்க மருத்துவம் செய்யாவிடில் வளர்ந்துவரும். முன்னோர்கள் செய்த தீய செய்கையால், பின்னர் கருவையும், குழந்தையையும் தாக்கும் வன்மையுள்ளதாக இந்நோய் இருக்கும். மேக நோயின் காரணமாகப் பொருத்துகளில் சூலை நோய் வரும். தாய்மார்களுக்கு ஏற்படும் மேக நோயால், பிறக்கும் குழந்தைகளுக்குக் கண்கள் குருடாகும் வாய்ப்புள்ளது. எனவே, பிறக்கும் குழந்தையின் கண்களில், "சில்வர் நைட்டிரேட்" என்ற கரைசலைச் சொட்டு மருந்தாக விடுவார்கள். நோய் கண்ட மூன்றாம் நிலையில் மோதிரம் போன்று குறியிலும், உடலிலும் கொப்புளமாகக் கிளம்பி உடைந்து புண்கள் உண்டாகும்.

65. *நீரை யொறுக்கும் நிறுத்தும் அடைப்படுத்தும்*
*பாரில்மிகு தோடத்தை பற்றுவிக்கும் - சேரவே*
*கூடாப் புணர்ச்சி கூடாது தாதுகெடும்*
*வாதாடும் பிரமியந்தான் வந்து.*

**உரை :** சிறுநீரைத் தடைப்படுத்தித் துன்பம் உண்டாக்கும். உலகில் மிக்க குற்றங்களைப் பரவச்செய்யும். இது கூடாப் புணர்ச்சியால் ஒருவருடன் ஒருவர் தொடர்புகொள்ள எற்படும். உடலின் வன்மை அழியும். கூடாப்புணர்ச்சி என்ற சொல், இயற்கை வழியில் இன்பம் நுகராது வாய் வழிச் சேர்க்கை, மலவாய் வழியாக இன்பம் துய்த்தல், ஓரினச்சேர்க்கை என்பனவற்றைக் கொள்ளலாம். மேலும் பல பெண்களுடன் கலத்தல், ஒரே பெண்ணிடத்தில் பலர் ஒரே நேரத்தில் உறவு கொள்ளல், மாதவிலக்குள்ள காலங்களில் துய்ப்பது என்பவற்றைக் குறிக்கும். நீதி இலக்கியங்களான **விறலி விடு தூது** போன்ற நூல்களில் திறம்பட எடுத்துரைக்கப்பட்டுள்ளது. இந்நோய் 1464ல் வாசுகோடகாமா காலத்திலேயே இந்தியாவிற்கு வந்தது என்று வரலாறு கூறும். எனவே, இது பரங்கிநோய் எனப்பட்டது. இதைத் தீர்க்க சித்த மருத்துவர்கள் பரங்கிச்சக்கை என்ற பொருளைப் பயன்படுத்தி வருகின்றார்கள். பரங்கி நோயும் **"மேகநோய்"** என்று கூறப்பட்டது. எனவே மதுமேக நோயிலிருந்து பிரித்துணர **"பிரமியமேகம்"**, **"பிரமேகம்"** என்று மருத்துவர்கள் பெயரிட்டார்கள். இப்பிரமேக நோயின் பல குறிகுணங்கள் இன்றுள்ள எய்ட்ஸ் நோயை ஒத்துள்ளன.

66. *காயும் குளிரும் கனத்துத் தகைதகைத்துத்*
*தோயமிக உள்ளெரிப்புத் தோன்றும் - ஏகம்*
*வறட்சி அனல்விழும் மாங்கிசமும் வற்றும்*
*மருட் பிரமியத்தின் இயல்பு.*

**உரை :** உடலில் சுரம் காயும், குளிர்ந்து நடுக்கம் உண்டாகும். உலர்ந்து போதல், உடலில் வெப்பம் என்பனவும்,

கொழுப்பு வற்றி, மெலிவடையும். இது மருள் என்ற பிரமேகத்தின் தன்மையாகும்.

67. மாதம் பலநாள் வருமே சலமடைக்கும்
சேதம் அதுமிகுதி செய்விக்கும் - வாதம்
வருமே பவுத்திரமும் வன்பக்க சூலை
தருமே சலப்பிரமியம் தான்.

**உரை :** மாதத்தில் பல நாட்கள் சுரநோய் வரும். சிறுநீர் தடைபடும். மூட்டுகளில் சூலை வாதம் பற்றும். மோதிர வடிவான கொப்புளங்கள் தோன்றி, உடைந்து, புண்கள் ஏற்படும். இவ்வாறு சலப்பிரமியம் இருக்கும்.

68. நீரும் கழுத்துச் சலமுடைந்து
நின்றிற்றுச் சலம் வீழ்ந்து
சேரும் நாற்றம் தானுண்டாய்
தினமாய் வறளில் விழுந்திருக்கும்
பாருங் காயம் நாளுக்குநாள்
பாழாய்ப் படிவந் தொடர்ந்துவரும்
வாரஞ் சென்றால் மரணந்தாள்
மயக்கம் சலத்துப் பிரமியமே.

**உரை :** சயப்பிரமியத்தின் குணங்களாவன நீர்ப்பையின் பகுதியில் சீழ் நீர் வைத்திருக்கும் . கெட்ட நீரானது ஆண் குறியின் மூலம் வெளியாகும். இது நாற்றமுடன் இருக்கும். நாள்தோறும் உடல் வாடி, நாளடைவில் இறப்பு ஏற்படக்கூடும்.

69. உந்தியில் வாத பித்தம்
உற்றிடும் சேத்துமம் மூன்றும்
பந்தியாய் இழிகை நீரும்
பத்திரு வகையாய் உண்டாகும்

*அந்தமில் வாதம் நாலும்*
*. . . . . பித்தம் ஆறும்*
*வந்திடும் சேத்துமம் பத்து*
*அனாதியாய் வகுத்த தன்றே.*

**உரை :** கொப்புள் பகுதியில் வாதம், பித்தம், கபம் என்பன இருபது வகைகளாக எற்படும். வாதத்தால் 4ம், பித்தத்தால் 6ம், சேத்துமத்தால் 10ம் முன்னோர்கள் வகுத்தார்கள்.

70. *முளையும் நிணமும் போன்றும்*
*முற்றின் மதுவே போன்றும்*
*நீளிய நரம்பு போன்றும்*
*நீரிலே தோன்று மாகில்*
*ஆளெரி யங்கை வேலும்*
*மாதின் பொருந்து வேலும்*
*வாளையும் வென்ற கண்ணாய்*
*வாதச் சொல்நான்கு மாமே.*

**உரை :** போர்களத்தில் போர் வீரர்களை வீழ்த்தும் உள்ளங்கையில் பிடித்த வேலாயுதம், பெண்களின் கண்களாகும். கண்களைச் சுழற்றி, வாளை உடைய வீரர்களை வெற்றிகண்ட பெண்களே, சிறுநீரானது முளையும், அதன் கொழுப்பையும் , நீண்ட நரம்பு போன்றும், கள் போன்ற நாற்றமும் உள்ளதாகில், வாதத்தால் ஏற்பட்டது. வாதக்குற்ற பிரமேகம் 4 வகைகளாகும். பெண்களின் கண்கள் வாளுக்கும், வேலுக்கும் ஒப்பிடப்பட்டுள்ளது இலக்கிய நயத்தைச் சுட்டுவதாகும். இதுபோன்று நளவெண்பாவிலும் வருகின்றது.

"

"

ஆயினும் இங்கு மறைபொருளாக சில கருத்துக்கள் உள்ளன. வேற்படை பெண்களின் அல்குல்லுக்கு ஒப்பாகும். இவைகளால் பெண்கள், கலவியாகிய போரைத்தொடுத்து,

ஆண்களை வீழ்த்துவார்கள். நோயுற்றப் பெண்களால், மேகநோய் ஏற்படும். உடல்நலத்தைக் கெடுத்து, அலர்களை வீழ்த்தும்.

71. *துய்ப்பான் வாகச் சொன்ன*
*சுவையிரு மூன்று தன்னில்*
*கய்ப்பன மிகவும் உண்டு*
*கசந்தது அறிந்தா னாஇல்*
*மெய்ப்பட விளம்பி நின்று*
*வேலென நீள மாகி*
*மைப்படக் கண்ணுனாளே*
*வாதச் சொல்நான்கு மாமே.*

**உரை :** பெண்ணே! உண்ணும் அறுசுவைகளில் கசப்புச் சுவை மிகவும் உள்ளது. கைப்புச் சுவையை அறிந்து, உண்மையுடன் எடுத்துரைக்கின்றேன். வேல் போன்ற நீளமான மை பூசிய கண்களைக் கொண்ட பெண்ணே, வாதம் நான்கு வகைகளாகும்.

72. *பொருந்தமு துணைக்கெண் றெண்ணி*
*புளியினை மிகவும் உண்டு*
*வருந்திய அகட்டி நின்று*
*மாகிடன் கழியும் நீர்தான்*
*கருந்தடங் கண்ணும் காதும்*
*காதலால் பொழிந்து பொங்கும்*
*பெருந்தட முலையி னாளே*
*பித்தச் சொல்ஆறு மாமே.*

**உரை :** பெரிய மார்பகங்களைக் கொண்ட பெண்ணே, பித்தத்தால் ஏற்படும் பிரமேக நோய் ஆறு வகைப்படும். பொருந்துகின்ற புளிச்சுவையை விரும்பி உண்பார்கள். ஐம்புலன்களான கண்ணால், காதால் மிக்க அன்பு உன்மீது பொங்கும் நிலைகொண்ட பெண்ணே, இந்நோயில் சிறுநீர் வருந்திடும் வண்ணம் பிரியும்.

73. பையரவல்குலாளே
பாரிலே ஓடும் நீருள்
கையிலே அள்ளி அந்நீர்
கழிந்தது தண்ணீர்க் குற்ற
தமையுறு மேனி யுற்று
[1]வட்டஞ்சேர்ந் திருக்கும் மாகில்
ஐயுறு நீர தாகும்
அல்லதேற் பித்த மாமே.

**உரை :** பாம்பின் படமொத்த குறியைக் கொண்ட பெண்ணே, உலகில் உள்ள நீரைக் கையில் எடுத்து அருந்த, உடல் நலிவடைந்தால் நீர் குற்றமுள்ளது. இதனால் பித்த மேக நீரானது தோன்றும்.

74. காணால் சொல்லக் கேளிரின்னும்
காய்ச்சும்...............
நாணா திருந்தசெகந் தனிலே
நாணா துரைத்தேன்.......
கோணா திருந்து வகைப்படியே
குறித்துச் செய்ய வல்....
பேணா துயிரும் பேணிவிடும்
பெரியோ ருரைத்த பிரமியத்தால்.[2]

**உரை :** இத்தன்மையை உலகத்திற்கு வெட்கப்படாமல் திருத்தமாகக் கூறுகின்றேன் கேளுங்கள். போற்றுதற்குரிய பெரியவர்கள் கூறிய பிரமியத்தை நீக்கி, உடலைக் காக்கும் வழிகளைப் பின்பற்றுதல்.

75. நீரதி தாக மாகி
நிகழ்ந்ததை தேவன் தானும்
பாரதி கார மாகப்
பதித்துயர் களைய வேண்டிச்

---

1. வாட்டம் என்றாதல் வேண்டும்.
2. இப்பாடல் சிதைந்துள்ளது.

*சீர்பெரி தான நூலில்*
*சிறக்கவே இதனை நானும்*
*நீரதி காரம் மென்னும்*
*இலட்சணம் நிகழ்த்த லுற்றேன்.*

**உரை :** மேகநீர் அதிகமானால் ஏற்படும் அதிக நீர்வேட்கை. இந்நிலைபற்றி, தேவனாகிய இறைவன், நீக்க எண்ணினார். எனவே, சிறப்பாக எடுத்துரைக்க நான் மக்களுக்குச் செம்மையாக இலக்கணத்துடன் கூறுகின்றேன்.

76. *பிரமியமெடுத்து அனேகநாட் சென்று*
*பெருகவே உதரத்தில் வாயுநின்றய*
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . . . .
*சிறுத்து நெடுநாட்கள் சென்றிடுமாகில்*
*உருக்கதுதான் வாயது திறக்குமாப்போலே*
*பரிந்துவந் தடைக்கும்பார் பறிப்படும்*
*பின்னலிங்கமாம் சூலையே.*[1]

**உரை :** நீண்ட நாள் செல்ல, பிரமிய நோய் அதிகமாகும். வயிற்றில் வாயு நிறையும். லிங்கத்தில் சூலைபோல வலி உண்டாகும். நீர்த்துளை சிறியதாகும்.

77. *என்பார் சூலை யாமது ஏழும்*
*அங்கித் தோன்றிடும் கோசம்*
*துன்பமாம் கடுப்பும் முள்தைய்த்தப் புண்போல்*
*சுருக்கெனக் குத்திடும் தண்டி*
*இன்பமே செய்யில் கிடுகிடுமென் றோடி*
*யின்பிளனை பிறவி நோக்காடா*
*அன்பா முக்கி மலத்துடன் சலமும்*
*மதுபொதி பொதியென வீழும்.*

---

2. இப்பாடல் சிதைந்துள்ளது.

**உரை :** முள் குத்திய புண்போல குத்தல் வலி ஏற்படும். உடல் உறவின்போது வலி தோன்றும். மலத்துடன் சிறுநீரும் அதிகமாக விழும்.

78. *விழும்பொழு தனேகநாள் வேதனைக் கிடமாம்*
*மிகுந்து முன்போலிருக்கும் மேவிடும்*
*பிளவை எட்டினில் யன்றிவேற*
*மாய், நாள் சென்று*
*பழம்படிபோல வேதனை செய்யும்*
*பாறிடும் பின்னையும் ஏகும்*
*விளம்பிடில்இன்னம் குணம்செய்யும் கண்டீர்*
*வெம்பிய லிங்கமாம் சூலையே.*

**உரை :** சிறுநீர் வெளியேறும்பொழுது, நீண்டநாள் வலியை உண்டாக்கும். பிளவை நோய் தோன்றும். இது முற்றிய பின்பு, பழமையுடைய துன்பத்தைத் தரும். பின்னர் புண்கள் ஆறும். வலியும் நீங்கும். ஆண்குறியானது வெம்பிய தோற்றம் அளிக்கும். இவ்வாறு சூலையின் குணங்கள் இருக்கக் காணலாம்.[1]

79. *உருத்துவர் தரையில் பவனம் வைத்திடவே*
*யு...... ளம் பிறந்து குருவாய்*
*முருத்தது திரண்டே உப்பது விளைந்த*
*வளமைபோல் நீர்த்தலந் தன்னில்*
*நிறுத்திடக் கல்லும் உட்புணம் மிகுந்து*
*நீரது வற்றியே கல்லா*
*மறுத்த நீரடைப்பான் என்றும்பழைய*
*வாயுறு வேதத்தின் மொழியே.*[2]

**உரை:** சிறுநீர்ப்புழையில், காற்று இருக்கும் கொப்புளமாக

1. பாடல்கள் 76, 77, 78 என்பன சூலைநோயின் தன்மைகளைக் கூறுவதால், ஏடுகள் மாறி இருக்கக்கூடும்.

2. இப்பாடலும் நீரடைப்பு நோய்க்கானது. பிரமேகம் என்ற தலைப்பில் வந்துள்ளது.

உருவாகி, பின்னர் முழுமையடையும். கடலில் ஏற்பட்ட செல்வம்போல் நீர்ப்பையில் சூடு ஏற்பட கல்லானது உருவாகும். எனவே சிறுநீர் வெளியாவது குறையும். இது நீரடைப்பு எனப்படும் என்று மருத்துவ நூல்கள் மொழியும்.

80. *மொழிந்திடும் பழைய பிரமியந் தன்னின்*
*முடுக்குடன் கடுப்பு வாதம்*
*வழிந்தழிப் பிளவை பவுத்திரமிக்க*
*வளமை நீரடைப்புடன் சூலை*
*கழிந்திடும் கிரிச்ச.............*
*...... டுத்திடும் வெஞ்சலக் கழிச்சல்*
*பொழிந்திட ..................*
*போக்கிடும் வகைசில உரைப்பாம்*[1]

**உரை :** முற்றிய நிலையில் உள்ள மேகநோயில் வலிமையுடன் கடுப்பு வாதம், அழித்தலைச் செய்யும் பிளவை நோய், மோதிர வடிவான புண், நீரடைப்பு, சூலை, சிறுநீர் தடைப்படுதல், கழிச்சல் நோய் என்பன ஏற்படும் என்று கூறுகின்றேன். இவற்றை நீக்கும் வழிகளைச் சொல்லு கின்றேன். முற்றிய நிலை மேக நோயில் இக்கிளை நோய்கள் தோன்றும். எய்ட்ஸ் நோயில் விடா சுரம், மருந்துகளுக்குக் கட்டுப்படாத கழிச்சல் நோய், செரியாமை, எடை குறைதல் என்பன துணை நோயாக வரும். தொண்டையில், வாயில் புண்கள் தோன்றும். பிரமேக நோயில் வரும் துணை நோய்கள் AIDS நோயிலும் காணப்படுவது வியப்பிற்குரியதாகும்.

81. *வாயு பெருத்திடும் ........ந்டில்*
*சூலை........டன் படில்*
*நாளில் செனித்திடும் பவனத்துடன்*
*.....ர மூல மண்டை*
*வாதங்கள் அரைக்கடி விரகடிப்*
*பிளவை ...........ண*

---

1. இப்பாடல்கள் சிதைந்துள்ளது.

மென் மயிர்ப் பிளவை யுயிர்க்கொடி
பவு.....................

82. கோசப்பிளவை பீசத்திற் குறித்த
பிளவை ........ பேசப்படும்
கடபவுத்திரத்தில் பெருகி விழுநீர்
ம..... சக்கிடச் செய்வீர்கள்
பிணிய றாதுடல முள்ள
....டாயிங்குயிர்க் குறுதி நவிலக்
கேளாய் மருந்...........
..........................[1]

**மருந்துகள்**

83. உரைத்த காரீயம் ரசம், சிந்தூரம், கொள்ள
நிரைத்த தடங்க.... ரமும் நரி
படவளமை யாய்க் கொண்
....ல் கற்பூரம் புழுகுமடை
படாச் சலாகையில் செலுத்து
நுரைத்த நல்லெண்ணைய் குளுமையாய்
வைத்து நுகர்ந்ததை முனுகுதல்செய்யே.[1]

84. நல்லேலம் அதிமதுரம் நற்சீரகங்கன்ன
ருல்லாச நெல்லி முந்திரி பருத்திப்பருப்பும்
வல்லாவரையான மாவதும் கூடச்
சொல்லாயித்துடன் நாலத்தொருபங்கு சீனி

85. கூட்டியொரு மண்டலமும் கொள்வீராகில்
சேட்டுமமும் வாதமொடு பித்தமிவை தீரும்
நாட்டிலுள்ள உட்டிபுணஞ் சூலைகளும் நன்றாக
ஒட்டிவிடும் ஒட்டிவிடும் உண்மை.

---

1. இப்பாடல் வரிகள் சிதைந்துள்ளது.

**உரை :** ஏலக்காய், அதிமதுரம், சீரகம், நெல்லி, முந்திரி, பருத்திப்பருப்பு, வல்லாரை, மாங்காய்ப் பருப்பு இவற்றைப் பொடி செய்து சூரணமாக்கவும். இதன் எடைக்கு 1/4 பங்கு சர்க்கரையைச் சேர்க்கவும். ஒரு மண்டலம் உண்ண கபம், வாதம், பித்த நோய்கள் அகலும். வெப்ப நோய்கள், சூலை நோய்கள் இவற்றை நன்றாக நீக்கும். இது மெய்யான சொல்லாகும்.

## மேகக்குறிகள்

86. *அரைசேரும் முத்திரமும் ஆங்குவெளுத் தூறில்*
*திரல்வாத மேலிட்ட தென்பாய் - நிறைவாம்*
*மரத்து நிறமாய் அழியிலது பித்தம்*
*உரத்துமே லிட்டதென ஓது.*

**உரை :** நீர்ப்பையில் உள்ள சிறுநீர் வெண்மையான நிறத்தில் வெளியாதல் வாதத்தால் ஏற்பட்டதாகும் என்று அறியவேண்டும். முழுமையான மரத்தினுடைய பழுப்பு வண்ணமாக வெளிப்பட, பித்தக் குற்றம் வலிமையுடன் அதிகமாகி உள்ளது எனலாம்.

87. *ஓதுநீர் வெண்ணிறமாய் ஊறிவிழும் நீர்க்குணந்தான்*
*ஏது சிலேட்டுமமே லிட்டதென்று - பூதலத்தில்*
*மாமாய மாதவனும் மாகேந் திரன்முதல்*
*சேர் முனிவர் ஓதுங்கால் குறி.*

**உரை :** வெண்மையான வண்ணத்தில் சிறுநீரானது வெளிப்பட்டால் சிலேத்துமத்தால் உண்டானது என்று அறியவும். உலகில் காக்கும் கடவுளான திருமாலும், இந்திரன் முதலானவர்கள் முதல், அவர்களை யாகம் போன்றவற்றாலும், சரியை, கிரியை, யோகம், ஞானம் போன்றவற்றாலும் வழிபடும் முனிவர்கள் வரை அனைவரும் குறிப்பால் அறியமுடியும்.

**விளக்கம் :** மேக நோய், காமக்கடவுளான மன்மதனால் ஏற்படும். மாதவன் என்ற திருமாலின் உறைவிடம் திருப்பாற் கடலாகும். இக்கடல் வெண்மை நிறமுடையது. கப நோய்க்கு ஒப்பாக இங்கு திருப்பாற்கடல் கூறப்பட்ட நயம் காணத்தக்கது. இந்திரன் அகலிகையை மருவி உடலெங்கும் பெண் குறியைப் பெற்றதாகப் புராணங்கள் கூறுகின்றன. மேக நோயின் மூன்றாம் நிலையில் உடலெங்கும் கொப்புளங்கள் தோன்றி, உடைந்து புண்கள் ஏற்படும். இதை எண்ணியே நூலாசிரியர் இங்கு இந்திரனைக் குறிப்பிடுகின்றார்.

88. *குறிப்பாய் விழுநீரும் கூறிச்சாய் வண்ணம்*
*நிறைப்பணமை யாகிலோ நேரிழையே - அறப்பால்*
*உணர்ந்தார்கள் தொந்தத்தால் உற்பவித்த தென்ற*
*குணந்தானும் நல்லதெனக் கொள்.*

**உரை :** நோய் கொண்டவனின் சிறுநீரை ஆய்வு செய்யவும். கறுமையான வண்ணமுடன் இருக்க, முக்குற்றத்தால் உண்டானதென்று அறியவும்.

89. *கொள்ளும் வியாதியுள்ளோன் குட்சி யழிநீரை*
*மெள்ளப்பா ராய்க்கறுப்பாய் மேவில் நிறம் - துள்ளுநீர்*
*சற்றே வெய்யிலில் வைத்துச் சுடக்காய்ச்சி*
*சாற்றிடுநீ உப்பென்று தான்.*

**உரை :** நோயுள்ளவனின் சிறுநீரைக் காணவும். கறுப்பு நிறத்துடன் காணப்பட்டால் அதைச் சூரிய ஒளியில் வைக்கவும். பின்னர் காய்ச்சிப் பார்க்கவும். உப்பு படிந்திருக்கும். இங்கு "துள்ளுநீர்" என்ற சொல்லாட்சியானது, சிறுநீரானது தடைப்பட்டு வெளியானதைக் குறிக்கும்.

90. *தானே யிடுமுப்பை தானெடுத்தே எண்ணெய்தோய்த்*
*தானே கழிநீர் ஒருதுளியில் - மானே*

---

★ இப்பாடல் சிதைந்துள்ளது

*உப்புமுத்தி ரத்தில்விட எண்ணெய் பரவினாலிம்*
*மாத்திரங்கா லக்கோப மெண்.*

**உரை :** மான் போன்ற பெண்ணே, சிறுநீரில் உள்ள உப்பை எடுத்து, எண்ணெய் உள்ள தட்டில் சேர்க்கவும். பின், கொழுப்புத் துண்டுகள் கொண்ட சிறுநீரின் ஒரு துளியைக் குச்சியால் எண்ணைத் தட்டில் விடவும். எண்ணெய் பரவினால் "**காலபிரகோபம்**" என்று உணரவும். இது நீர்க்குறி எனப்படும். தேரையர் நீர்க்குறி, நெய்க்குறி நூல் செய்துள்ளார். ஆயின் இந்நூலின் முறைகள் அவற்றிலிருந்து முற்றிலும் மாறுபட்டு உள்ளன.

91. *எண்ணுமஞ்சள் போல இருந்துவிழும் மூத்திரத்தில்*
*உண்ணுமெண் ணெய்த்துளிதான் ஒன்றுவிட-கண்ணியே*
*அந்தமண்ட லம்போல ஆயிருக்கின் பித்தத்தால்*
*வந்தகோ லத்தின் வகை.*

**உரை :** மஞ்சள் நிறமாக விழும் சிறுநீரில் எண்ணெயின் துளியை ஒரு குச்சியினால் விடவும். மண்டலம்போல வட்டமாகப் பரவினால் பித்தத்தால் ஏற்பட்டது என்று வகைப் படுத்தலாம். எண்ணெயானது, உண்ணும் வகையில் உணவு உள்ளதாக இருத்தல் வேண்டும்.

92. *வகைமுத்திரம் துளிபோல வந்த நிறநீலம்*
*தொகைசெய்து எடுத் தெண்ணெய் துளிவிடில்*
*பகையாகி முத்துப்போல் கண்டித்தால் மொய்குழலாய்*
*சேத்துமந்தான் அகத்திய கோபத்தாலாங்காண்*[1]

**உரை :** கருப்புநிற சிறுநீரில் எண்ணெய்த் துளி ஒன்றைக் குச்சியால் விடவும். முத்துப் போன்று நின்றால் அது கபத்தால் ஏற்பட்டது என்று அறியலாம். "முத்து ஒத்த நிற்கின் மொழிவதென் கபமேனி" என்று தேரனின் நெய்க்குறி நூலில் கூறப்பட்டுள்ளது காண்க.

1. இப்பாடல் சிதைந்துள்ளது.

93. காண்கின்ற நீரும் கடுகெண்ணை போல் நிறமாய்க்
காணில் வரல்பருமை காண்துரும்பை - ஊணியே
எண்ணைய்த்துளி மூத்திரத்தை எடுத்து விட்டவதை
நுண்ணிக்கண்ணோரப்பார் நயந்து.

**உரை :** பார்க்கும் சிறுநீர் கடுகெண்ணையைப் போன்ற நிறமாக இருந்தால், அதை ஒரு தட்டில் விடவும். பின்னர், விரல் பருமன் கொண்ட (விளக்குமாற்றுக்) குச்சியில் எண்ணையைத் துளியளவு எடுத்து, தட்டில் விடவும். பின்னர் (ஆய்வுக் கண்ணுடன்) பார்க்கவும்.

94. நயந்தக் குறிப்புறக் கூவைபோலா (நண்ணி)
வியந்தபித்த வாத மிரண்டுமே - வியந்த
கோபத்தால் வந்த குணமிதெனக் குறிய
பாபத்தால் வந்த அதை.

**உரை :** விருப்பமுடன் கூட்டமாக பித்தம், வாதம் என்ற இரண்டும் தன்னிலையான ½, 1 என்ற நிலையிலிருந்து மீறி அதிகமாகும். தீவினையான அந்நோயை, இரு குற்றத்தால் ஏற்பட்ட இயல்பு என்று அறியவும்.

95. அதைத்து வரும்காடி யாகும்நீர் ஆனால்
புதுக்கு மெண்ணை துளிவிடில் ஆங்கேபதைத்து
நெடும்பாகு மேல்நீள்வாதச் செற்று
இடுங் குடில மிரண்டும்.[1]

**உரை :** வீக்கத்தால் வரும் சிறுநீர் காடியைப்போல் காணப்படும். சிறுநீரில் புதியதாக ஆட்டிய எண்ணைத் துளியை விடவும். பெண்ணே, நீளமான குழம்புபோலக் காணப்பட்டால், வாதம் அதிகமாகவுள்ளது என்று அறியலாம்.

---

1. இப்பாடல் சிதைந்துள்ளது.

96. *இரண்டு நீர்வெளுத்தால் எண்ணெய்த் துளியைவிடில்*
*இரண்டு மிழந்திப்பாதி மிதந்து - புரண்டதிலே*
*பாதி யமிழ்ந்துமறே் பற்றும்பித் தம்சேரும்*
*காதும்வகை யீதாக கருது.*

**உரை :** இரண்டாவதாக சிறுநீர் வெண்மையானதாக இருக்கும். இதில் எண்ணெய்த் துளியை விடவும். சீறி எழுந்து பாதியளவு அமிழவும். மீதியானது புரண்டு மிதக்கும். இக்குறிகளால் பித்தம், கபம் என்பன கூட்டாக உள்ளது எனவும். உடலுக்குக் கேடு செய்யும் எனவும் அறியலாம்.

97. *கருதிவிழும் மூத்திரத்தைக் கலக்கிப்பார்*
*காரிரத்த மாய்த்தோன்றக் கண்ட பின்னே*
*விரைவிலது பரம்பியிருந்தா லதனுள்ளே துரும்பாலே*
*மிக்க எண்ணெய்த் துளிவிட்டுடனே யமிந்த . . . .யதுமேல்*
*. . . . . செய்யும் சன்னி வாதமொருமையுடன்*
*கூடினதென் றுள்ளுணர்ந்து கொள் . . . விருபையத்தன்*
*நேருவென* *

**உரை :** வெளியாகும் சிறுநீரைப் பிடித்துக் கலக்கி ஆய்வு செய்யவும்.கறுப்புநிற இரத்தமுடன் இருக்குமாயின் அதை தட்டில் விடவும். விரைவாகத் துரும்பினால் ஓர் எண்ணெய் துளியை தட்டில் விடவும். துளியானது சிறுநீரில் அழுந்தினால் சன்னிவாதம் என்ற நோய்தான் ஏற்பட்டது என அறியலாம். மாமேரு போன்ற அருளுடன் உலகத்திலுள்ள மருத்துவர்களுக்கு பெண்ணே, எடுத்துரைக்கின்றேன்.

98. *மாதவனார் சொன்னதொரு வகையதனைக் கேளாய்*
*மலங்கெடுத்து மூத்திரமாய் வந்ததனை ஓட்டில்*
*நீதமுடன் பிடித்ததன்பின் எண்ணெய்சற்றே ஊற்றிக்*
*நின்றிடும் சிங்காசனம் பெற்றகண் ணாடிபோல*
*ஓதப்பல வர்க்கம்போல் இரண்டிணக் கம்பனம்*
*போலூது சங்கம் போலக் குடைம்பதின்*

---

* இப்பாடல் சிதைந்துள்ளது.

குணத்தைக் கேளும் செப்புநடை
பேச்சுமறப் போலுயர்வி போலக்காதலில்
இப்படித் தோன்றி விக்குறி செயநோயும்
கண்டிடநாழியில் ஆறும் சுசிச்சிதியில்காணே'

**உரை :** மிக்க தவத்தை உடைய மருத்துவ வல்லவர்கள் அறிந்து கூறியவற்றைக் கேட்கவும். (கன்மம், ஆணவம், மாயை ஆகிய) மும்மலங்களை அழித்து சிறுநீரைப் பிடித்து, ஓட்டில் விடவும். பின் எண்ணையை ஒரு துளிவிட நிற்கும். அரியணையில் உள்ள கண்ணாடிபோல் காணப்படும்.

99. காணவரு ரோகிவிடு மூத்திரத்தில் எண்ணெய்
கடுகியொரு துளியிட்டால்
காணுங் குறிப்பதுதங் கூறுதவும்
யானைக் குதிரையைப் போலவெற்றிலை
போலுயர் குடம்போலிடம் போலுற்ற
அதனிற் காணின் சேணிலுயர் மதியமெனை
நாளிலே வாழ்ந்தேக நோயும் புலிபோல
நாளிலே தேயும் பூணுலவு மாதே
இக்குறியை ஆராய்ந்து பொற்புற
அறிவது புந்தியின் கூர்மைகளே.

**உரை :** நிலவுபோன்ற பெண்ணே, (மருத்துவர்களைக் காணவரும்) நோயினரின் சிறுநீரில் எண்ணையின் துளியை விடவும். யானை, குதிரை, வெற்றிலை, குடம் போன்ற வடிவங்கள் தோன்றினால் உடல் வன்மையானது சிறிது சிறிதாகக் குறைந்துகொண்டேவரும். இவ்வறிகுறிகளைக் கண்டு கூர்மையான அறிவுடன் குறிப்பாகக் கூறுகின்றேன். அறியவும்.

---

1. இப்பாடல் சிதைந்துள்ளது.

100. கூர்மையாய் நோயினிழி மூத்திரத்தில்
எண்ணெய் குறித்ததிலோர் துளிவிடக்
சுடர்ந்தறியும் குறிப்பும் நேர்மையாம் பட்சிகள்
போலாமை
போலச் செந்நாய் நிற்பனபோல
கார்நிறத்த பன்றிபோலக் கருநாய்கள் பூனை
கடுக்குந் தெளிவைகளுருக் கொண்டா ரென்றால்
பாரிலுள்ள வைத்திய ரேபார்ப்பதல்ல
பார்த்தவர் முன்சொல் உறுதிபண்ணுவரே.

**உரை :** கூர்மையான அறிவுடன் நோயினரின் சிறுநீரை ஓட்டில் விடவும். பின்னர் எண்ணெய்த் துளியைக் குச்சியால் தோய்த்துவிடவும். பறவைகள், ஆமை, செந்நாய், பனைமரம், சிங்கம், நீண்ட பாம்பு, கருமைநிறப் பன்றி கருமையான வண்ணமுள்ள நாய், பூனையின் உருவங்கள் தோன்றினால் மருத்துவத்தில் பயனில்லை என்று உறுதியுடன் இருக்கவும்.

101. பண்ணிசைபோல் மொழிமாதே பகரக் கேளாய்
பாருலகில் நோய்கள் மூத்திரத்தைப் பார்த்தே
எண்ணெய் ஒருதுளியைவிடில் ஏப்பங்கன்னி
இருந்தாலும் குறைத்தலைப் போல்எய்தினாலும்
கண்ணுறவே நெடும்பனைப் போல் தோன்றினாலும்
கண்டறியும் பண்டிதரே காண்நோயாகும்
வண்ணமிடம் தெரி....... வசமே என்று
வந்துவிட்டீர் உங்களை நான் வாழ்த்தினேனே.[1]

**உரை :** பண்ணின் இசையொலியை ஒத்த பேச்சைப் பேசுகின்ற பெண்ணே, கூறுகிறேன் கேட்பாயாக. உலகில் சிறுநீரைக் கொண்டு நோய்களைக் காணும் முறைகளைக் கூறுகின்றேன். சிறுநீரில் எண்ணெயின் துளியைக் குச்சியில் தோய்த்து விடவும். சிறுநீரில் நுரை அல்லது மேகத்தின் உருவம் தோன்றினால், தலையற்ற முண்டம் தோன்றினால்,

1. இப்பாடல் சிதைந்துள்ளது.

நீண்ட பனைமரம் தோன்றினாலும், மருத்துவர்களே உணரவும். நோயின் இயல்புகளை அறிந்துகொள்ள, நான் உங்களை வாழத்துகின்றேன்.

102. வாழ்த்தினோர் பிணிகள் தீர்க்கும்
வைத்திய ரேநீர் கேளீர்
பாழ்த்த நோய் . . . . . . . . . . .
பரிச்சரிற் தெண்ணைய் வட்ட
மாகவே விளங்கித் தோன்றில்
வாழ்த்த நோயாளர்க் காக்கக்
காலனும் இல்லை தானே.

**உரை :** வாழ்த்தி நோயைத் தீர்க்கும் மருத்துவரே, நீங்கள் கேளுங்கள். இவ்வுலகத்தில் எண்ணைய்த் துளியை சிறுநீரில் விட்டு, ஆய்ந்து, வட்டமாகத் தோன்றினால், நோயாளியைக் காப்பாற்ற காலகாலனான சிவபெருமானுடைய அருளாலும் இயலாது என்று உணரவும்.

103. இல்லுறை மாந்த மேகத்து
இயல்புநீர் இளநீர் போல்ச்
சொல்லிய தூயநீர் போல்
தொடுந்தேறும் முறிந்த நீர்போல்
அல்லதைக் கவிழ்த்த திடத்தில்
ஆய்ந்தியில் எறும்பும் ஈயும்.
வல்லரே தொந்த ரோகம்
மருந்தறிந்து தவு வீரே.

**உரை :** இல்வாழ்க்கையைத் துய்க்கும் மக்களின் பிரமேக சிறுநீர் இளநீர்போல், தூய்மையான சிறுநீர் போலக் காணப்படும். சிறுநீரை வெளியே சாய்த்து விடவும். சிறுநீரை ஈயும், எறும்பும் மொய்க்க முக்குற்றங்களால் ஏற்பட்ட மதுமகேம் என்று அறியவும். இதற்குத் தக்க மருத்துகளை அளித்து, மக்களுக்கு உதவி செய்யுங்கள்.

104. உதவிசெய் வுடலில் மேகம்
உற்றிடும் நீரைச் சிந்தும்
புதுநிலத் தெண்ணெய் சிந்தில்
பொன்றது மதுபோல் நாறில்
அதுவேநா ளினிலே தொந்த
ரோகமாம் உட்ணமுந்தான்
விதிமுறை வாய்க்கு மந்த
மேகத்தால் வினையு ண்டாமே.

**உரை :** நீரானது உடலுக்கு உதவியாக இருக்கும் பிரமேக நீரை ஆய்வுசெய்ய, எண்ணைையைத் துளியைவிட்டு, கள்ளின் நாற்றம் எழுந்தால், முக்குற்றக் கூட்டால் ஏற்பட்டது. பிரமேக நோயால் தீவினை ஏற்படும் என்று அறியவும்.

105. உண்டுடல் எடுத்த மாந்தருக்கு
உறுப்பிணி மேக ரோகம்
கண்டிடில் அதிக தாகம்
கால்கைகள் எரிவு தோன்றிக்
கொண்டிழி நீரும் மெல்ல
கொடிதனில் குறும்பை நாறும்
மண்டியே உருக்கும் தொந்த
ரோக மென்றறை குவீரே.

**உரை :** அன்னமய கோசத்தால் உடல் கொண்ட மக்களுக்கு, மதுமேகத்தால் ஏற்பட்ட அதிகப்பசி, கைகால்களில் எரிச்சல், தேங்காய் குறும்பை நீர் என சிறுநீர் நாறும். நோய் அதிகமாக முக்குற்றக் கூட்டுறவால் உடல்வன்மைக் கெடும். இவ்வாறு இருந்தால் மதுமேகம் என்று அறியவும்.

---

குறிப்பு : இப்பாடல் மாறியுள்ளதாகத் தெரிகின்றது. மதுமேக நோய்க்கான பாடல் என்று உணரலாம்.

<u>பாடவேறுபாடுகள்</u>

**பிரமேகத்தின் குணங்கள்**

*மேக குணவாகடம் பாடல் எண். 63*

*மாதருட[1] மாமயலால் மாமிகுதி தெண்டிப்பால்[2]*
*சேத[3] முறவருநோய் தேடியே - ஆதரவில்[4]*
*வந்துநொந்து மெள்ள வளரும்4 பிரமியங்கள்*
*சிந்தைதனில் காண்பார் தெளிந்து.[5]*

*மேக குணவாகடம் பாடல் எண். 76*

*பிரமிய மெடுத்து அனேக நாட்சென்று*
*பெருகவே[1] உதரத்தில் வாயுநின்றய வந்திடில்[2] சலமது*
*சிறுத்து நெடுநாட்கள் சென்றிடுமாகில் மறிபடு நீருமட்டு[3]*
*உருக்கதுதான் வாயது திறக்குமாப்[4] போலப்*
*பிரிந்துவந் தடைக்கும் பார் பறிக்கப்படும்*
*பின்னலிங்கமாம் சூலையே[5]*

---

*அகத்தியர் 2000 பாடல் 1*

*1. தெண்டிப்பாய், 2. வரும், 3. கண்டோர் தெளிந்து*

*அகத்தியர் ஆயுள் வேதம் 1200 (பாடல் 243)*

*1. மாதகுடன், 2. கண்டிப்பாய், 3சேதமுறவே, 4. ஆதரவாய், 5. எப்போது,*
*6. எப்போது முப்பரனை யெழிலடிப தம்பணியு*
*தப்பாது நோயதுவே சார்பு.*

*அகத்தியர் 2000 பக்கம் 29 - பாடல் 1*

*1. திறமுடன், 2. வந்திடில், 3. வட்டுவை, 4. தித்திக்குமாப்போல*
*5. பறிபடும் பின்னே பறிந்து பின்னடைக்கு*
*பாரினில் இலிங்கமாம் சூலை.*

மேகவாகடம் - பாடல் 77

என்பார் சூலை யாமது ஏழும்
அங்கி தோன்றிடும் கோசம்
துன்பமாங் கடுப்பும் முள்தைத்த புண்போல்
சுருக்கெனக் குத்திடும் தண்டு
இன்பமே செய்யில் கிடுகிடென் ரோடி
யின்பிளவை பிறவி நோக்காடா
அன்பா முக்கி மலத்துடன் சலமும்
மதுபொதி பொதியென வீழும்.

அகத்தியர் 2000 - பக்கம் 30 - பாடல் 2

சூலையே மிகுத்துத் தானென்னேரமும் மலந்தோன்றிடும்
லிங்கத்தின் கடுப்பு
சாலவே முள்ளு தைத்தப் புண்போல சற்றுளளை
சுருக் கெனக் குத்த
மேலெல்லாம் பாய்ந்து கடுத்திடும் பின்னை
பிறவியே நோக்கிடு
போலவே சுக்கில மலத்துடன் சலமும் பொத
பொதனவே வீடும்.

மேகவாகடம் - பாடல் 65

நீரை யொறுக்கும் நிறுத்தும் அடைப்படுத்தும்
பாரில்மிகு தோடத்தைப் பற்றுவிக்கும் - சேரவே
கூடாப் புணர்ச்சி கூடாது தாதுகெடும்
வாதாடும் பிரமியந்தான் வந்து.

அகத்தியர் 2000 - பக்கம் 23 - பாடல் 3

நிறையொடு நிறுத்து மடைப்படுத்தும்
பாரமிகுந் தோஷத்தைப் பதிக்கும் - சேரவே

கூடும் புணர்ச்சி மிகக்கூடாது தாதுகெடும்
வாதிடும் பிரமியந்தான் வந்து.

மேகவாகடம் - பாடல் 78

விழும்பொழு தனேகநாள் வேதனைக் கிடமாய்
மிகுந்து முன்போருக்கும் மேலிடும்
பின்னை எட்டினில் அன்றி வேறே
மாய்வனே நாள் சென்று
பழம்படி போல வேதனை செய்யும்
பாறிடும் பின்னையும் ஏகும்
விளம்பிடில் இன்னும் குணம்செய்யும் கண்டீர்
வெம்பிய லிங்கமாம் சூலையே.

அகத்தியர் 2000 - பக்கம் 30 - பாடல் 2

வீழுமாதம்னேகம வேதனை கேட்டு மிகுபடில்
முன்பு போலிருக்கும்
எழும்பிடு பின்னே யேட்டினில் பற்றி
ஏறவே அனேகநாட் சென்று
பழம்படி போல வேதனை செய்யும் பற்றிடும்
பின்னையும் ஏடுக்கும்
விளம்பிட இன்னும் பலகுணம்செய்யும்
மிகுந்ததோர் லிங்கத்தின் சூலை.

மேகவாகடம் - பாடல் 67

காயும் குளிரும் கனத்துத் தகைதகைத்து[1]
தோயமிகு உள்ளெரிப்புத் தோன்றும்[2] - ஏகம்[3]
வறட்சி அனல்வீழும்[4] மாங்கிசமும் வற்றும்
மருட்சிபிர மியத்தின் இயல்பு[5].

---

அகத்தியர் 2000 - பக்கம் 23 - பாடல் 4

1. தலைவலித்து, 2. உள்ளெரிப்புத் தோணுமே, 3. காயுப்
4. வறளச்செயல், 5. பிரளப் பிரமியமே.

மேகவாகடம் - பாடல் 64

வந்து மிகுந்து வளரும் பிரமியத்தில்
முந்தவினை யாக[1] முளைக்குமே - பிந்தவே
அண்டமெனும் சூலை அதுவும் பவுத்திரமும்
உண்ட தெனவே[2] உரை.

மேகவாகடம் - பாடல் 68

நீரும் கடுத்துச் சலமுடைந்து
நின்றிற் றுச்சலம் வீழ்ந்து
சேரும் நாற்றம்[1] தானுண்டாய்த்
தினமாய் வறளில் விழுந்திருக்கும்[2]
பாருங் காயம் நாளுக்குநாள்[3]
பாழாய்ப் படிவந் தொடர்ந்துவரும்[4]
வாரஞ் சென்றால் மரணந்தான்
மயக்கும் சலத்துப் பிரமியமே.

மேகவாகடம் - பாடல் 67

மாதம் பலநாள் வருமே சலமடைக்கும்
சேதம் அறமிகுதி செய்விக்கும் - வாதம்
வருமே பவுத்திரமும் வண்பக்க சூலை
தருமே சலபிரமியந் தான்.

---

அத்தியர் 2000 - பக்கம் 23 - பாடல் 3

1. முந்தவிருவாத, 2. உண்டதுவே என்ன

அகத்தியர் 2000 - பக்கம் 24 - பக்கம் 6

1. இரத்தம் தானுண்டாய், 2. நிற்கும், 3. நாள் ஒன்றில், 4. பாழாய் வற்று உடம்பெங்கும்.

*அகத்தியர் 2000 - பக்கம் 24 - பாடல் 5*

மாதமொருநாள் வருமோடிக் கல்லடைக்கும்
சேதமற மிகுதி செய்விக்கும் - வாதமே
வருமே பவுத்திரமும் வன்பக்க சூலை
தருமே சலப் பிரமியம்.

*மேகவாகடம் - பாடல் 1*

மண்டலம் தன்னி லுள்ள
மனிசராய்ப் பெண்ணா ணார்க்கும்[1]
கொண்டதோர் பிரமே கந்தரம்[2]
கொள்ளுமுன் எடுக்கும்[3] நோய்கள்
கண்டிடும் உடல்கை கால்கள்
கழன்றுமுன்[4] றெரிந்து காந்தி
உண்டநீர் சுவறிக் காட்டாது[5]
உடைத்துநீர் பாயு மன்றே.

*மேகவாகடம் - பாடல் 2*

கேளாய் போகம் அனுதினமும்
உண்ணும் அடிசில் பலமதனைக்
கோளாய் குற்றம்[6] பலதோடம்
குடிமைக்[7] குருக்கள் பிதாமாதா

---

*அகத்தியர் ஆயுள்வேதம் 1200 - பாடல் 241*

1. மனிதராண் பெண்ணுள் ளோர்க்கு, 2. பிரமேகந்தான், 3. தேடும், 4. கண்களு, 5. நாவற்றிக் காட்டி.

*அகத்தியர் ஆயுள்வேதம் 1200 - பாடல் 242*

6. குத்தும், 7. கோடி

வாழாக் கன்னி தாமழிந்து[1]
வரம்பு கடந்து மாறாகி[2]
கேளாச் சத்தம் காணாக்கண்
கெட்டுக் கண்டலர் பேசற்பேசி
ஊழா உடலில் உள்ளுடைந்து
உளுத்த மரம்போல் உள்கழன்று
மாழா மாளும்[3] வியாதி யினால்
வலிய சாபம் நோயிடுமே.

மேககுணவாகடம் பாடல் - 63

மாதரு மாமயலால்[4] மாமிகுதி தெண்டிப்பால்[5]
சேத முறவருநோய் தேடியே - ஆதரவில்[6]
வந்துநொந்து மெள்ள வளரும் பிரமியங்கள்
சிந்தைதனில் காண்பார் தெளிந்து

மேகவாகடம் - பாடல் 33

இந்திரிய[1] நீரே போல
இலிங்கத்தின் மூக்குப் போல
நந்தலை மூளை போல
நலியாமல்[8] புறப்பட் டோடும்[9]

---

1. கற்பழிந்து, 2. வாளாமல், 3. மாளாமானா

அகத்தியர் ஆயுள்வேதம் 1200 - பாடல் 243

4. மாமயிலின், 5. கண்டிப்பாய்,
6. எப்போது மும்பரனை யெழிலடிப்பாதம் பணிய
தப்பாது நோயதுவே சார்பு.

அகத்தியர் ஆயுள்வேதம் 1200 - பாடல் 246

7. இந்த, 8. நலியாதே, 9 . புறப்பட்டாலு

மந்தவா[1] தத்தில் நாலும்
நீங்கலாய்ப்[2] பித்த மாறும்
மந்தசிலேத் துமத்தில் பத்தும்
இதுதீர மருந்து சொல்வேன்.[3]

*மேகருணவாகடம் - பாடல் 67*

மாதம் பலநாள் வருமே சலமடைக்கும்[4]
சேதம் அறமிகுதி[5] செய்விக்கும் - வாதம்
வருமே பவுத்திரமும் வன்பக்க சூலை[6]
தருமே சலப்பிரமியம் தான்.

*மேகருணவாகடம் - பாடல் 9*

கொண்டைக் காடைகொள்[7]
குறுவை நெல் லரிசு
பெண்டைக் காமுறு[8]
பேசினும் நாடொறும்
நண்டைப்[9] பொடித்து
நத்தையி னுள்சதை
உண்டக் காலுலகு
ஒளியிழப் பாரே[10].

---

1. மந்தலை, 2. மடுத்திடும்
3. வந்திடும் சேத்தும ஒன்பான் வருமெனவகுத்தவாறே.

*அகத்தியர் ஆயுள் வேதம் 1200 - பாடல் 258*

4. சடைக்கும், 5. மிகுதியாய், 6 மாபேதம் சூலை,
7. குண்டைகட்குருவை நெல்லரிசிகள், 8. கானெனும்,
9. நன்றதாய், 10. கால் அவர் ஊழி இருப்பாரே.

மேகவாகடம் - பாடல் 3

முகமே காந்தி நெஞ்சுலர்ந்து
மூரித்துடலும் நடுநடுங்கும்[1]
நகமே பிதிர்ந்து சிரம்[2] நெகிழ்ந்து
நஞ்சுண் டவர்போல் மிகச் சோர்ந்து
பகலும் இரவும் உறங்கியுடல்[3]
பருத்துக் காட்டி மெலிந்துழன்று[4]
மிகவே தபனம்[5] உண்டாகும்
வேண்டா தன்னம் வேண்டாவே.

மேகவாகடம் பாடல் - 4

மெய்யெரு எரிந்து[6] சுடநாளி
வழியே பலகால் மிகமூடிக்
கைகா லெரிந்து நாவுலர்ந்து
கமல முகமும் வெளுவெளுத்து
அய்யோ குடலும் நோகுதென
அயர்ந்து கிடக்கும் கனாக்காணும்
பொய்யே அல்ல தபனமுண்டாம்[7]
பொருந்தா தன்னம் பொருந்தாதே.

மேகவாகடம்-பாடல் 64

வந்து மிகுந்து வளரும் பிரமியத்தில்
முந்த வினை யாக[8] முளைக்குமே - பிந்தவே

---

அகத்தியர் ஆயுள் வேதம் 1200 - பாடல் 26

1. முறுத்து உடலும் நடுநடுங்கி, 2. பரிந்து சீர் நெகிழ்ந்து

3. உருகியுடல், 4. பகருமேனியுடல் தளர்ந்து, 5. தவனம்

அகத்தியர் ஆயுர்வேதம் 1200-பாடல் 264

6. மெய்யே லேர்த்து, 7. தவனமுண்டாகும்,

அகத்தியர் ஆயுர்வேதம் 1200-பாடல்

8. முந்தவரும் வாதம்

அண்டமெனும் சூலை அதுவும், பவுத்திரமும்
உண்ட தெனவே உரை.

*மேகவாகடம் பாடல் - 65*

நீரை யொறுக்கும் நிறுத்தும் அடைப்படுத்தும்
பாரில்மிகு[1] தோடத்தைப் பற்றுவிக்கும்[2] - சேரவே
கூடாப் புணர்ச்சி[3] கூடாது தாதுகெடும்
வாதாடும் பிரமியந்தான்[4] வந்து.

*மேககுணவாகடம் பாடல் - 68*

நீரும் கடுத்துச் சலமுடைந்து
நின்றிற்றுச்[5] சலம் வீழ்ந்து
சேரும்நாற்றம்[6] தானுண்டாய்
தினமாய் வறளில் விழுந்திருக்கும்[7]
பாருங்காயம் நாளுக்கு நாள்[8]
பாழாய்ப் படிவந்[9] தொடர்ந்துவரும்[10]
வாரஞ் சென்றால் மரணந்தான்
மயக்கும் சலத்துப் பிரமியமே[10].

---

*அகத்தியர் ஆயுள் வேதம் 1200 - பாடல் 255*

1. ஈரமிகும், 2. ஏற்றுவிக்கும், 3. கூடும் புணர்ச்சி, 4. வாதாடும் பிரமேகந்தான்,

*அகத்தியர் ஆயுள்வேதம் 1200 - பாடல் 256*

5. நின்றேயிற்று, 6. இரத்தம், 7. நிற்கும், 8. மாளொன்றில், 9. முடங்கி படுபடுத்து, 10. பிரமேகமெண்ணே.

மேககுணவாகடம்* பாடல் - 66

காயும்குளிரும் கறுத்துத் தகைதகைத்துத்[1]
தோயமிக உள்ளெரிப்புத் தோன்றும் - ஏகம்[2]
வறட்சி[3] அனல்விழும் மாங்கிசமும் வற்றும்
மருட்சி[4]பிர மியத்தின் இயல்பு.

மேகவாகடம் - பாடல் - 2

கேளாச் சத்தம் காணாக்கண்
கேட்டுக் கண்டவர் போல்பேசி

தன்வந்திரி வைத்தியம் - பாடல் 2

கேளாச் சத்தம் காணாக்கண்
கேட்டும் கண்டும் போற்பேசி

மேகவாகடம் - பாடல் - 1

கண்டிடு உடல் கைகால்
கழன்று உள்ளெரிந்து காந்தி
உண்டநீர் சுவரிக் காட்டா
உடைத்து நீர், பாயுமன்றே.

தன்வந்திரி வைத்தியம் - பாடல் - 4

கண்டிடு உடல் கால் கைகள்
கான்றழந் தெரிந்து காந்தி
உண்டநீர் சுவறிக் காட்டி
உடைத்து நீர், கழியுமென்றே.

---

* இப்பாடல் மேகவாகடத்தில் 67ஆம் பாடலாக உள்ளது. (பக்கம் 71இல் பார்க்க)

அகத்தியர் ஆயுள் வேதம் - பாடல் 266

1. கனத்துத் தலைவலிக்கும், 2. காயம், 3. வாளச்செய்யும்,
4. விரளப் பிரமியமாமே.

*மேகவாகடம் - பாடல் - 11*

மதுமாயப் பிரமேக மானால்
வந்திடும் குணங்கள் கேளாய்

*தன்வந்திரி வைத்தியம் - பாடல் - 8*

மதுமயமேகமானால் வந்திடும் குணத்தைக் கேளாய்

*மேகவாகடம் - பாடல் - 12*

அசனியப் பிரமேக மானால்
அதுசெய்யும் குணங்கள் கேளாய்
கசமது மூன்றும் நாறும்
காய்ச்சினால் இரையும் கண்டாய்

*தன்வந்திரி வைத்தியம் - பாடல் - 9*

அசனிய மேகமாளால்
அதுசெய்யும் குணத்தைக் கேளாய்

*மேகவாகடம் - பாடல் - 16*

சுரோணித பிரமேகத்தின்
சூட்சுமம் கூறலுற்றேன்

*தன்வந்திரி வைத்தியம் - பாடல் - 13*

சுரோணித பிரமேகத்தின்
சூட்சுமம் சொல்லக் கேளீர்.

*சிவனார் வேம்பு செயநீர்**

மேகம் 21 வகையும் தீர இம்மருந்து பயன்படும். உடல், கை, கால்களில் கறுப்பு நிறமும், வெடிப்பும் ஏற்பட்டுப் புண்ணாகும். இதற்குச் சேரும் சரக்குகள்.

| | |
|---|---|
| சிவனார் வேம்பு | - 15 பலம் |
| கந்தகம் | - 2 பலம் |
| குன்றிமணி | - 15 பலம் |
| பொன்னாவரை | - 15 பலம் |
| சேராங்கொட்டை | - 15 பலம் |
| கறுப்புத்துவரை | - 15 பலம் |

பின் ஐந்து சரக்குகளையும் இடித்துக்கொள்ளவும். சிவன் வேம்பைக் கவசமாக்கிக் கொள்ளவும். துளையுள்ள பாண்டத்தில் வைத்துமூடி, சீலைமண் செய்யவும். பின் கசபுடம் வைக்கவும். 11 நாழிகை சென்ற பின் எடுக்கவும். இதை எடுக்க செயநீர் கிடைக்கும்.

*பயன்பாடு :* கழஞ்சளவு செயநீரை, பழைய அரிசிப் பொரிமா கழஞ்சளவுடன் சேர்த்துண்ண, லேகியம் போலாகும். சிவனார் வேம்பு, சித்தர்களுக்கும், தேவர்களுக்கும் ஈடானது. இதை பல்லில்படாமல் 1 மண்டலம் உண்ண, மேகநோயானது சிதறிவிடும். இம்மருந்து உண்ணும்போது பெண்களுடன் உறவு கொள்ளக்கூடாது.

*திருமதுரச்சீந்தில் பால்*

உடலுக்கு அழகுதரும் தாமரை, புண்ணாகி நெய்போல் உருகும். இது வெடிமேகம் .

---

**குறிப்பு :** ★இம்மருந்துக்கான உரை வைத்திய அட்டவணையில் இல்லை. எனவே, பதிப்பாசிரியரே இதற்கு உரை எழுத வேண்டியதாயிற்று.

*சேரும் சரக்குகள்:*

| | |
|---|---|
| சீந்தில் கொடி | - |
| செவ்வகத்தி | - 10 பலம் |
| பசுவின் பால் | - ஆழாக்கு |
| பசுவின் நெய் | - 2 ஆழாக்கு |
| சீனி | - 1 பலம் |

கலந்துகொண்டு மூன்று நாட்கள் உண்ண தீரும். பெண்களுடன் உறவு கொள்ளல் ஆகாது. சூடாக்கிய கலத்தில் பழைய அரிசியைப் பொங்கி, சிறுபயறு, வறுத்த உணவு, உண்ணவும். சூரிய ஒளியில் செல்லல், மிகுந்த ஒலிவாயுப்பொருள்கள் ஆகாது. புகையிலை, கல்லுப்பு கூடாது. இளவெந்நீர், சோறு உண்ணவும்*.

**பொருட்பண்பு**

*அருகு*

"அறுகம்புல் வாதபித்த ஐயமோடு ஈளை
சிறுக அறுக்கும் இன்னம் செப்பில் - அறிவுதரும்
கண்ணோயோடு தலைநோய் கண்புகை இரத்தபித்த
உண்ணோய் ஒழிக்கும் முறை".

அறுகம்புல், வாத, பித்த, கப நோய்கள், ஈளை இவற்றை நீக்கி, அறிவை உண்டாக்கும். கண் நோய், மூளை நோய், கண்ணில் புகைச்சல், இரத்த அழுத்தம் என்பன நீக்கும்.

*அருநெல்லி*

"அருநெல்லிக்காய் குளிர்ச்சியாம் பித்தம் போக்கு
மருவு துவர்ப்பாற்றுரிகை மாற்றும் - விரியுலகில்
தாகதுயர் நீக்கும் சார் இருமலைத் தொலைக்கும்
ஆக கொதிப்பகற்றும் ஆங்கு".

★ இதுவும் பழைய உரையில் இல்லை. எனவே பதிப்பாசிரியரே உரையை எழுதும்படி நேர்ந்தது.

அருநெல்லிக்காய் குளிர்ச்சியைத் தந்து, பித்த நோய்களைப் போக்கும். நாவறட்சி, இருமல் என்பனவற்றை நீக்கும்.

*அழிஞ்சில்*

அழிஞ்சில் விதை உலக வசியத்திற்கும், மறைப்பு மையுக்குமாம்.

*அதிவிடையம்*

அதிவிடையம் சருக்கார அற்புதநோய் வெப்பு
கொதிமருவு பேதியொடு கோழை - எதிர்வாந்தி
என்றழைக்கும் நோய்க்கூட்ட மில்லா அகற்றவிடும்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

சருக்காரம், அற்புதநோய், வெப்பு, பேதி, கோழை, வாந்தி என்பனவற்றைப் போக்கும்.

*அதிமதுரம்*

"கத்தியரிக்குப் பிணியால் வகுப்புண்டாகும்
கண்ணோய் உளமாந்தம் விக்கல்வலி வெண்குட்டம்
பித்த எலும்புருக்கி கிரிச்சரம் ஆமவாத
பித்தமத மூர்ச்சை விடபாகம் வெப்பம்"
தத்திவரு வாதசோணிதம் காமாலை
சர்வவிடம் காமியநோய் தூது நட்டம்
குத்திருல் வாசி அங்கமிதள் நோய்புத்து
குயப்புண்ணும் போம்மதுரம் எனக் கூறுங்காலே".

அதிமதுரம் என்று கூறும்பொழுது, கத்திரிக்கோல் போன்ற அறுவைக் கருவிகளால் உண்டான புண்கள், கண்நோய், உளமாந்தம், விக்கல், வலிப்பு, வெண்குட்டம், எலும்புருக்கி, சிறுநீரக நோய், ஆமவாதம், பித்தம், மயக்கம், நஞ்சு நோய்,

வெப்பம், வாத சோணிதம், காமாலை, கடிவிடங்கள், மேக நோய்கள், தாது நட்டம், இருமல், உடல் நோய், உதட்டு நோய்கள் , குய்யவிரணம் என்பன தீரும்.

*அக்கரகாரம்*

"அக்கிரகார மதன்பேர் உரைத்தக்கால்
உக்கிர காலத்தோடு ஓடும்காண் - முக்கியமாய்
கொண்டால் சலமூறும் கொம்பனயே தாகசுரம்
கண்டால் பயந்தோடுங்காண்".

அக்கிரகாரத்தால் கொம்பன் என்ற ஊழிநோய் ஓடும். வாயில் நீர் ஊறும், சுரம் அதில் ஏற்படும் நீர்வேட்கை என்பன நீங்கும்.

*அப்ரகம்*

"அப்ரகமென்று அறைந்தக்கால் அண்டமகோதரமும்
எப்பிரமியங்களும் முன்நீரிழிவும் வெப்பூறல்
பேதமும் போகா மேகபித்தமும் கண்ணோயும் பல்
வாதமும்போம் தாதுவு மால்".

அப்ரகம் என்றுகூற அண்டவாதம், பெருவயிறு, மேகநோய்கள், நீரழிவு, வெப்பம், தோல் நோய்கள், பித்த நோய்கள், கண்நோய்கள், வாத நோய்கள், தாது நட்டம் தீரும்.

*அவரை*

"அதிபித்தம் வாந்தி அரோசகம் உண்டாம்
குதிவாதம் வாய்சுரப்பும் கூடும் - துதிசக்கர
வாள அவரை ஒத்த வனமுலை மாதேபசிய
வாள்வரைக் காயான் மதி".

மிகுபித்தம், வாந்தி, அரோசகம், குதிவாதம், வாய் நீர் ஊறல் என்பன, பச்சை நிறமான அவரையை உண்பதால் ஏற்படும்.

அபின்

"நல்லபின் குணத்தை நாடறிய நாம்புகல்வம்
அல்லல் குன்மவாத அருஞ்செவி நோய் - பல்லின்வலி
பேதியந்த மந்திநோய் பீனசம்போம் வன்மையுண்டாம்
சாதி உதிரச்சுத்தி காண்".

அபின், குன்மவாதம் , செவிநோய், பல்வலி, கழிச்சல், எலும்பு நோய், பீனிசம் என்பனவற்றைத் தீர்க்கும். இரத்தத்தைத் தூய்மைப்படுத்தும்.

அகில்

"தளர்ந்த வருத்தருக்காம் தக்க மணத்தால்
உளைந்த சுரமுமுவதும் ஓடும் - வளர்ந்திகழு
மானே அகில்புகைக்கு வாந்தியு அரோசகம்போம்
தானே தளர்ச்சியறும் சாற்று."

அகில் மரத்தால் ஏற்படும் நன்மைகளாவன, மூத்தவர்களுக்கு ஏற்ற மணத்தையுடையது. சுரநோய் விலகும். வாந்தி, வாய்க்குமட்டல், சுவை, தளர்ச்சி என்பன நீங்கும்.

ஆதண்டை

"மண்டைக்குடைச்சலறும் வாயுவழி பீனிசம்போம்
தொண்டைக்கபமும் தொலையும்காண்- மிண்டுசெய்யும்
வாதக்தடுப்பகலும் மாதே ஆதண்டைக்கு
போதப் பலபிணியும் போம்."

ஆதண்டையால் மண்டையில் ஏற்படும் வலி, வாயு, பீனிசம், கப நோய்கள் தீரும். வாதக்குடைச்சல் கடுப்பு நீங்கும்.

*ஆகாச கருடன்*

"அரையாப்பு வெள்ளை அகலாக் கொருக்கை
கரையாதகட்டி இவைகாட்டினார் - அரையில்
திருடரெனச் சொல்லும் விடஞ்சேர் பாம்பும் அஞ்சும்
கருடன் கிழங்கதனைக் கண்டு."

ஆகாயக்கருடன் கிழங்கைக் கண்டால் அஞ்சும் நோய்கள். அரையாப்பு, மேகம், மேகப்புண்கள், கட்டிகள், நஞ்சுகள் என்பன .

*ஆனை நெருஞ்சில்*

"மேகத்தைப் போக்கிவிடும் வெண்குட்டதானொழிக்கும்
தேகத்தில் கல்லடைப்பைத் தீர்க்கும்காண் - மேதினியில்
தேனை யரும்பாகைத் திருத்தும் கிளிமொழியே
யானை நெருஞ்சிலது.
யானை நெருஞ்சிலது சீதளமாகும்
மானே எலும்புருக்கி மாற்றுங்காண் - மேனிதனில்
உள்ள எரிச்சல் உழையும் தாகமொடு
தள்ளு பித்தமும் போகுந்தான்."

யானை நெருஞ்சில் மேகம், வெண்குட்டம், கல்லடைப்பு, எலும்புருக்கி, நீர்வேட்கை, உடல் எரிச்சல், உழலை என்பனவற்றைப் போக்கும்.

*ஆவாரை*

"சொல்லுதற்குமட்டோ தொலையாத மேகநீர்
எல்லாமொழிக்கு எரிவகற்று - மெல்லவச
ஆவாரைப் பம்பரம்போலாட்டு தொழில் அணங்கே
ஆவாரை மூலியது.

ஆவாரை மூலிகையால் மேகநீர், எரிச்சல் என்பன நீங்கும்.

*இருவாட்சி*

"கண்ணொளிவு மெய்யில் கமழ்மணமு நீடழகு
நண்ணும்வலி மூர்ச்சை நாசமாம் - பண்ணளியு
கங்குலும் வாழ்வார் குழலே காரமொடு வெப்புமிக
தங்கும் இருவாட்சி மரந்தால்"

கண்ணில் ஒளியும், உடலுக்கு மணமும், வலி மயக்கம் என்பன தீரும்.

*இலவம்*

"நீர்க்கடுப்பு நீரெரிவு நீண்டொழுகு மேகமும் போம்
ஆர்க்கும் விந்தடைக்கு ஆண்மையுனும் - பார்க்குள்
நிலவு மதிவதன நேரிழையே ஒப்பா
இலவு மரத்தால் இயம்பு."

நீர் எரிச்சல், மேகம், விந்து வெளிவராமல் இருத்தல், ஆண்மைக்கேடு என்பன தீரும்.

*ஆடுதின்னாப்பாளை*

"ஆடு தொடாப்பாளைக் கிருமி வன்சிலந்தி
நீடு கருங்குட்டம் நிறைகரப்பான் - ஆடிடச்செய்
எண்பது வாயுமிகக் குட்டமும் தீரும்
திண்பெரு நற்றதுவுமாம் செப்பு.

ஆடுதின்னாப்பாளையால் குடற்புழுக்கள், சிலந்தி நோய், கருநிற தோல் நோய்கள், கரப்பான், 80 வகையான வாதநோய்கள் நீங்கும். தாது பெருக்கியுமாகும்.

*ஆடாதோடை*

"காசமொடு மந்தம் கதித்த பித்தம் கொடுஞ்சு
வாசம் கழுத்துவலி முகநோய் - கூசி
ஓடாதிரா திங்கொருநாளு ஒண்தொடியே
ஆடாதொடைத் தூருக்கு."

ஆடாதோடை வேரால் மந்தம், பித்தம், இரைப்பு, கழுத்துவலி முகநோய் நீங்கும்.

*இலுப்பை*

"குன்றா இலுப்பையின்பூ கூர்மதுரம் வாசனையாம்
தின்றால் பயித்தியமும் சேருங்காண் - வன்றலுறும்
தார்குழலே பித்தசுரம் தாகம் தணிந்துவிடும்
வார்தயக்க மெய்தும் வழுத்து

இலுப்பைப்பூ இனிப்புச் சுவையுடையது. மணம் கொண்டது. பித்தம் அதிகமாகும். பித்தசுரம், நீர்வேட்கைத் தணிக்கும் எனலாம்.

*விலாமிச்சை*

"மேகம் விழியெரிச்சல் வீறி இரத்தபித்தமொடு
தாக மத மூர்ச்சைப் பித்தஞ்சார் மயக்கம் - சோபம்
சிரநோயிவை ஏகும் செய்ய விலாமிச்ச
கிரிசிரமும் என்றென் றிசை".

விலாமிச்சை வேர், இரத்த பித்தம், நீர்வேட்கை, வெறி , மயக்கம், பித்த மயக்கம், வீக்கம், தலை நோய்களைப் போக்கும்.

*உசிலை*

"புண்புரை கிராணி இரத்தப்போமதி சாரக்கடுப்புத்
திண்பெறு தாகஞ் சோபஞ் சீதளமும் - நண்பி
வதிவிரை வாய்த் தாண்டு அணங்கே பருத்த
உதிமரத்தின் தூரிலை வேர்."

புண், புரை, மிகு கழிச்சல், இரத்தக் கழிச்சல், கடுப்பு, நீர்வேட்கை, குளிர்ச்சி, வீக்கம் என்பன நீங்கும், வேர், இலை இவற்றால்.

*உத்தாமணி (வேலிப்பருத்தி)*

"ஆலித்தெழுந்த நோய் அத்தனையும் தீருமே
வேலிப்பருத்தியதன் மெல்லிலையால்- வேலொத்துக்
கண்டிக்கும் வாதமுடன் சந்நிதோடம்போம்
முண்டிக்கும் வாசனையாம் ஓது

உத்தாமணி இலையால் உள்வயிற்றுக் குன்மமொடு பற்றிக்குத்தாம் வலியும் குளிரும் போம்.

"இசிக்கும் வலியிரைப்பு மேத்தடிப்புமேகும்
பசிக்கு அதிமந்தமும் போம்பார்."

வாதம், சன்னி, தோடம், வயிற்றுவலி, குன்மம், வலி, குளிர், இரைப்பு, மேல் தடிப்பு, மாந்தம் என்பன தீரும்.

*இலைக்கள்ளி*

"செய்யகரப்பான் செவிநோய்வாதம் போக்கும்
பைய வருஞ்சூலை தனைப் பாழாக்கும் - வெய்யின்மிக
ஊது கிராந்தியோடு உட்புண்ணை ஆற்றிவிடும்
ஓது இலைக் கள்ளிப்பால் ஓர்."

இலைக்கள்ளிப்பால் கரப்பான், காது நோய், வாதநோய்கள், சூலை, ஊது கிராந்தி, முழிப்புண் என்பனவற்றை ஆற்றும்.

*இலந்தை*

"வேருக்கு ஆயாசம் விலகும் பசியுண்டாம்
சீரொத்திடும் இலைக்கு கீழ்மூலம் - சோரிவிழல்
மேலெரிச்சலுங் கடுப்பு மேகபித்தமும் போகும்
தாவும் விழியா யிலந்தை.

இலந்தையின் வேர், களைப்பைப் போக்கும், பசியைத் தரும், இலை சீழ்மூலம், மேல் எரிச்சல், கடுப்பு, மேகம், பித்தம் இவற்றைத் தீர்க்கும்.

*இண்டு*

*"பீனிசத்தைப் போக்கும் பெருகியதோர் நீரேற்றந்*
*தான சிக்கச் செய்யுமது சத்தியங்காண் - வானசைக்கும்*
*மண்டைக் குடைச்சலொடு வாய் சத்தியும்விலக்கும்*
*பண்டையுற்ற விண்டிதனைப் பார்."*

*"கட்டுவாதங்கன்றும் காரிகையே மேகம்போம்*
*முட்டு வாதங்களெல்லா முன்பொழியும்- கிட்டும்*
*புனலிறுந்தண்டுக்குப் போம் ஈளை சூலை*
*அனலில் எழுபுண்ணு மறும்".*

*பீனிசம், சளி, மண்டையில் ஏற்படும் வலி, வாந்தி, வாதநோய்கள், ஈளை, சூலை, உடலில் உண்டான புண்கள் தீரும்.*

*இஞ்சி*

"இஞ்சியதனுக்கு இருமலையு ஒக்காளம்
வஞ்சிக்கும் சந்நிசுரம் வன்பேதி - விஞ்சுகின்ற
சூலையறும் வாதம்போம் தூண்டாத தீபனமாம்
வேலையுறுங் கண்ணாய் விளம்பு."

இருமல், வெகுட்டல், சந்நி, சுரம், கழிச்சல், சூலை, வாதம், என்பனவற்றை நீக்கி, பசியை உண்டாக்கும்.

*ஈச்சங்குறுத்து*

"பேரீச்சுதன் குருத்தைப் பேணியே தின்பவருக்கு
கீரிச்சு குன்மவலி ஏகும்காண் - ஊரில்

சிறிய ஈச்சுக் குருத்தைத் தின்றால் வயிற்றின்
மறி உதிரவாயுவறும் வாழ்த்து."

பேரீச்சின் குருத்தை உண்ண சிறுநீர் அடைப்பு,வயிற்று வலி தீரும். சிறிய ஈச்சங்குருத்தை உண்பவருக்கு வயிற்றிலுள்ள வாயுவும் நீங்கும். செம்மறி ஆட்டுப் புலால், பால் உண்பதால் வயிற்றிலுள்ள காற்று நீங்கும்.

*ஈச்சுரமூலி*

"பலபல வீக்கம் சன்னி பாதங்களோடு
நலமகல் விடங்கள் நடுங்கும் - கலகலெனப்
பேச்சுரமுண்டாகு மலர்ப்பெண்ணினமே நீகேளா
ஈச்சுரமூலி தனக்கின்று.

ஈச்சுரமூலி சோபை, சன்னி, நஞ்சுகள் என்பவற்றைத் தீர்க்கும். குரல்வளம் ஏற்படும்.

*ஊமத்தை*

"திரிதோடம் வெப்பு சிரங்கும் சொறி நஞ்சோடு
அரிதேமல் அன்புடைய மண்டா ஒருவார்
அருமருந்தை ஒத்த அணங்கே உலகில்
பெருமருந்தை நீ எடுத்தபின்."

கிரிதோடம், சொறி, சிரங்கு, வெப்பு, விடம் தேமல் என்பன நீங்கும்.

*எருக்கு*

"எருக்கம்பால் கட்டிகளையே கரைக்கும், வாயுவை
திருக்கறவே கொன்றுவிடும் தீரா - செருக்கான
சன்னிவலி தீர்க்கும் சார்ந்தபல செந்தூர
முன்ன முடிக்கும் என்றோர்."

கட்டிகளைக் கரைத்து, வாயுவை நீக்கும். சன்னி நோய்கள், வலிப்பு என்பனவற்றைப் போக்கும். செந்தூரம் செய்யப்பயன்படும்.

*எலுமிச்சை*

"தாகம் நகநோய் தாழா சிலிபதநோய்
வேகங்களுன் மாதம் வீறுபித்தம் - மாகண்ணோய்
கன்னநோய் வாந்தியும் போங்கட்டுவாதித் தொழிலின்
மன்னெலுமிச்சங்கனியை வாழ்த்து."

நீர்வேட்கை, நகச்சுற்று, யானைக்கால், உளப்பிணிகள், மிகுபித்தம், கண்நோய், காதுநோய், வாந்தி என்பன தீரும்.

*எட்டி*

"ஆலவிடமொக்கு அருந்தக் கடிதீரும்
ஞாலமதில் பித்த குணநாசமாம் - மாலைக்கோ
அட்டிய பாகுமொழியான விட முட்டிஎனு
எட்டி மரமேரிது."

எட்டி மரம் நஞ்சுடையது. இதனால் நஞ்சுக் கடிகள் நீங்கும். பித்தம் விலகும்.

*ஏலம்*

"தொண்டைவாய் கவுள்தால் குதங்களில்
தோன்றுநோய் அதிசாரம் பன்மேகத்தால்
உண்டைபோல் எழுங்கட்டி கிரிச்சரமு
உழலை வாந்தி சிலந்தி விடசுரம்.

பண்டை வெக்கை தாகநோய் காசமும்
பாழும் சோமப் பிணிவந்து நட்டமுள்
வண்டை மீளவன் பித்தமிவைக் கெலா
மலாமாம் பருமேலம் மருந்தே."

பெருஏலத்தின் இயல்புகள் தொண்டை, வாய், கன்னம், தாடை, குதம் போன்ற உறுப்புகளில் வரும் நோய்கள், பெருங்கழிச்சல், மேகநோய், சிறுநீரக நோய்கள், கட்டிகள், வாந்தி, சிலந்தி, விடசுரம், வெப்பு, நீர்வேட்கை, காசநோய், பித்தம் என்பனவற்றைப் போக்கும்.

*ஓரிலைத்தாமரை*

"ஓரிலைத்தாமரை உள்ளூற்ற குணத்தைக் கேளாய்
மார்பில் பாலில்லாத மங்கையர்க்கு - மோரில்
குடிக்கப் பாலுண்டாகும் கோரவன் மேகம்
படிக்குள் இருக்குமோ பார்."

இதை அரைத்து மோரில் பெண்களுக்குத் தர மார்பில் பால் ஊறும். மிகக் கொடிய மேக நோய்கள் தீரும்.

*ஓமம்*

"சீதசுரம் காசம் செரியா மந்தம் பொருமல்
பேதி இரைச்சல் கடுப்பு பேராமோ இருமல்
பல்லொடு பன்மூலம் பாசமில்லோ என்செயுமோர்
சொல்லொடு போம் ஓமம் எனச்சொல்."

ஓமத்தால் குளிர்சுரம், காசம், உணவு செரியாமை, மந்தம், பொருமல், பேதி, கடுப்பு, இருமல், இரைச்சல் என்பன தீரும்.

*கருவேலமரம்*

"கருவேலின் வேர்க்கு கடுப்பு இரத்தம் மாந்தம்
பருவாதமூறு கரப்பானும் - பெருகும்
பெரும் பேதியும் போக்கும்பேச இனிக்கும்
கரும்பே இதனைக் கருது".

ஆசனக்கடுப்பு, ஆசனவாயிலிருந்து குருதி வெளியாதல், பசியில்லாமை, பரு, வாதநோய், கரப்பான், கழிச்சல் என்பன தீரும்.

*கருஞ்செம்பை*

"விப்புருதி புண்ணாறும் வீறுகரப்பனும் போம்
தப்பாமல் மேகம் தணியுங்காண் - வெப்பார்
கபரோகமேகும் கருஞ்செம்பை யொன்க்
கிபமா முலை மாதே எண்."

கருஞ்செம்பை இலையினால் புண்கள், கரப்பான், மேகநோய்கள், கப நோய்கள் விலகும்.

*கடுக்காய்*

"தாடை கழுத்தக்கி தாள் குறியிவிடப்
பீடை சிலிமுதல் பேதிமுட - மாடையெட்டத்
தூலமிடி புண்வாத சோணிகாமாலை இரண்
டால இடிபோம் வரிக்காயால்."

தாடை, கழுத்து, கன்னம், ஆண்குறி ஆகிய இடங்களில் வரும் கட்டிகள், யானைக்கால், கழிச்சல், உடல் பருமன், புண் வாத நோய்கள், சோணிதம், காமாலை நீங்கும்.

*கற்கடகசிங்கி*

"முக்கலையங் காசகபமூடுகிராணிமூல
கக்கி இரத்தபித்தம் கறைபேதி - உட்குடலில்
தங்கொலி நீர்புண்சுரம் சபீரம்விடவெப்பு
சிங்கியினால் போகமுறும் தேர்."

முக்கல், காசம், கபம், கிராணி, மூலம், இரத்தம் வாயில் வருதல், பித்தம், பேதி, நீர்நோய், புண், சுரம், வெப்பு என்பன போகும். ஆண்மை பெருகும்.

*கருநொச்சி*

"வாதக்கடுப்பகலும் மாறாத பீநிசம்போ
மோதப் பேயோடி ஒளிக்குங்காண் - வேதைசெய்யு
மண்டைக் குடைச்சலறும் மாசில்கரு நொச்சிக்குப்
பண்டைத்தலை வலி போம் பார்."

கருநொச்சி இலை வாதக்கடுப்பு, பீனிசம், மண்டையில் உள்ள நோய்கள், தலைவலி என்பனவற்றைப் போக்கும்.

*கல்மதம்*

"கண்டபடி பிணிமேகம் கல்லொடு நீர்ஊனடைப்பு
வண்டல் கிரிச்சரநோய் மாபிரமி - உண்டலினால்
பன்மதஞ் சேர்தாது நட்டம் பண்ணுமிந்த நோய்க்கூட்டம்
கன்மதஞ் சேர்க்காக்கும் காண்."

கல்மதம் மேக நோய்கள், கல்லடைப்பு, தசையடைப்பு, சிறுநீரக நோய்கள், பிரமியம், தாது நட்டம் என்பன போக்கும்.

*கல்நார்*

"காசபித்தம் வாதம் கடுப்பீறு நோயெரிவு
வீசுசார்த்தி நீரடைப்பு விந்துநட்டம் பேசுமசை
தின்னாரைக் கூவுமந்த தீக்குடர்கல் தாகமிவை
கல்நாரைக் கூவவிடுங் காண்."

காசம், பித்தம், வாதநோய், கடுப்பு, எரிச்சல், வாந்தி, நீரடைப்பு, ஆண்மைக் குறைவு என்ப நீங்கும்.

*கருங்காலி*

"கைப்புற்றிருக்கும் கருங்காலி வேருக்கு
மைப்புழுவும் பாகம் மதுநீரும் - மெய்க்குளெழு

குட்ட முதிரப்போக்கும் கூவியமு தகலும்
மட்டுப் பூங்கோதாய் வழுத்து."

கசப்புடைய கருங்காலி மரத்தின் இயல்புகள் புழுக்கள், உயலிலுள்ள தோல் நோய்கள், குருதிப்போக்கு என்பன நீர்க்கும்.

*கடுகுரோகணி*

"மாந்தம் சுரமையம் வாயு கரப்பன ஆமஞ்
சேர்த்த மலக்கட்டு திரிதோடம் - பேர்ந்தபொட்சி
புண்வயிறு நோயிவை போம் பொற்கொடியே பேதியுண்டாம்
திண்கடுகு ரோகிணிக் குத்தேர்."

மாந்தம், சுரம், ஐயநோய்கள், வாயு, கரப்பான், வாயு சேர்ந்த மலக்கட்டு, முக்குற்றங்கள், புண், வயிற்று வலி என்பன தீரும்.

*கசகசா*

"கிருமி நமைச்சல் கிராணி அதிசாரம்
சிரநீர் நித்திரைபோம் செப்பிலுருவழகும்
காந்தியு முண்டாகும் கசகசாவின் குணத்தை
தேர்ந்தவர்க்கு விந்துமாம் தேர்."

கிருமி, அரிப்பு, கிராணி, தலையில் சேர்ந்த நீர் என்பன தீரும். உறக்கம் உடலுக்கு அழகு, ஒளி உண்டாக்கும். ஆண்மை பெருகும்.

*கருஞ்சீரகம்*

"கருஞ்சீரகத்தால் கரப்பனொடு புண்ணும்
பெருஞ்சீராய் பீனிசமும் மாறி - மருந்தினால்
காய்ச்சல் தலைவலியும் கண்வலியும் போமுகில்
வாய்ச்ச மருந்தெனவே வை."

கரப்பான், புண், நீர்ப்பாய்ச்சல், சுரம், தலைவலி, கண்வலி என்பன தீரும்.

கத்தூரிமஞ்சள்

"புண்ணும் கரப்பானும் போகாக் கிருமிகளும்
நண்ணு மந்தாகினியும் நாசமாம் - வண்மலர்ந்த
கொத்தேர் அளகமின்னே சுக்கிலமும் புத்தியுமாம்
கத்தூரி மஞ்சளுக்குக் காண்."

தோல் நோய்கள், குடல்புழு, பசித்தீ இல்லாமை என்பன தீரும். ஆண்மை அறிவு அதிகமாகும்.

கரும்பு

"வாயு பித்தம் வாந்திநீர் மாறும் அதிதூல
நோயுள் எழும் வயிற்றுநோய் கலங்கும் - ஓயாத
ஈளையொடு பாண்டு எதிராதடங்கி நிற்கும்
நாளும் நாணல் கரும்பினால்."

கரும்பினால் வாயு, பித்தம், வாந்தி, வாய்க்குமட்டல், உடல் பருமன், வயிற்று நோய், தீராத ஈளை, வெளுப்பு நோய் என்பன தீரும்.

கட்டுக்கொடி

"பெரியகட்டுக் கொடிக்கு பேசு பெரும்பாடு
மரியு மலபேதியும் போமப்பா - உரிய
சிறுத்த கட்டுக் கொடிதான் சீதஇரத்தநீக்கு
இறுத்த புனலைக் கட்டுமென்."

பெரிய கட்டுக்கொடி பெரும்பாடு, மலபேதி என்பன வற்றையும், சிறிய கட்டுக்கொடி சீத இரத்தபேதியையும் போக்கும்.

*காக்கரட்டான்*

"மாதரால்வந்த வெட்டை வன்மேகம் சென்னிவலி
ஓதுசுரம் விழிநோய் ஓடும்காண் - பேதியொடு
மாக்காட்டாஞ் சீதமறு மாமூலியாம் வெள்ளைக்
காக்கரட்டான் வேரைக் கருது."

மேகநோய், காது நோய், சுரம், கண்ணோய், கழிச்சல் என்பன தீரும்.

*காரை*

"காரைத் தழைக்கு கடுப்பிரத்தம் போம்."

காரையின் தழை இரத்தக் கடுப்பை நீக்கும்.

*கார்போக அரிசி*

"கார்போக அரிசிகண்டால் கரப்பன்புண்
பீர் சருவநஞ்சிவை பித்தமறும் - பார்மீதில்
வாதகப நமைச்சல் வன்சொறி சிரங்குமறும்
சீதமலர்க் குழலாய் செப்பு."

தோல் நோய்கள், புண், கடி நஞ்சுகள், பித்த நோய்கள், கப நோய்கள் தீரும். குளிர்ந்த மலர்சூடிய பெண்ணே இதைக் கூறுவாயாக.

*கற்றாழை*

"பொல்லாமேகம் கபம் புழுகுலை குட்டரச
மல்லா பித்தம் பகந்தரம் குன்மம் - எல்லாம்விட்
ஏகுமரிக்கு எரிச்சல் கிரிச்சரமு
ஆகுமரிக்கு மருண்டு."

கற்றாழைக்கு மேக நோய்கள், கபநோய்கள், புழு வெட்டு, சூலை, தோல் நோய்கள், பித்தம், ஆசனப்புண், குன்மம், எரிச்சல், சிறுநீரக நோய்களை நீக்கும் ஆற்றல் உண்டு.

கருநெல்லி

"அதிளைணந்தேனும் சந்நிபாதம் தயக்கம்
மதிளைத் திடச்செய் வினைமாறும் - பதியில்
சனித்த கருவுருலந்தானும் வேறாகும்
கனித்த கருநெல்லி மரத்தால்."

சந்நிபாதம், தயக்கம், கன்மவினைகளான நோய்கள் தீரும்.

கழஞ்சி

"கழற்காய் விதைக்குக் கனஅண்டவாதம்
தழற்பக்க சூலைகுன்மம் சாந்தி - கழற்காவில்."

கழற்காய் விதைக்கு அண்டவாதம், அழல், பக்கசூலை, குன்மம் நீங்கும்.

கஞ்சா

"மூலக்கிராணியறு முன்புள்ள பேதிகட்டும்
சாலமயக்கும் பசியும் சாருங்காண் - தூலஞ்செய்
வாதமொடு வையமும்போம் வன்கரப்பன் தொலையும்
கோதறு கஞ்சா சடைக்கு."

மூலநோய், கிராணி, கழிச்சல், வாத நோய்கள், கரப்பான் நீங்கும். மயக்க உணர்வும், பசியும் உண்டாகும்.

கிரந்திநாயகம்

"சீதமறும் மாலிடமும் தீரும்விழி நோயகலும்
பூதமொடு மருளும் போகுங்காண் - மேதினியுள்
நாயகத்துப்புண் கிராந்தியாறு மயிலே கிரந்தி
நாயகத்தினாலே நவில்."

குளிர்ச்சி, விலங்குக்கடி, கண் நோய், உளப்பிணிகள், வெட்டைப்புண், கிரந்தி என்பன போகும்.

*கீழாநெல்லி*

"சீதபேதி பித்தவிடம் செவ்விழிநோய்க் கூட்டம்
பூதமொடு பேயிரத்தப் போக்குகளும் பூதலத்துட்
ஆழ்வாய்ப் பணிந்தேகும் தப்பாது நற்புலத்து
கீழ்காய் எனும் நெல்லிக்கே."

சீதபேதி, பித்தம், நஞ்சு, கண்ணோய், உளநோய், இரத்தப் போக்கு தீரும்.

"கீழா நெல்லிக் குணந்தான் கேளாய்
தாழாக் காமாலைகளைக் கண்ணுந்தா - தேனுழலும்
தொக்கி அனலும் தொலைக்கும் தொன்மேகம்போம்
தக்க விரணம் கெடுக்கும்தான்."

நீங்காக்காமாலை, அனல் நோய், மேகநோய்கள் ,விரணம் தீரும்.

*குன்றிமணி*

"நேத்திரநோய் பித்தநிறமுமாம் காமாலை
வேர்த்திடு தாபசோபம் வெப்புடனே - சோத்திட்ட
வையமும்போம் விந்துவா ஆயிழையே காட்டிலுறை
செய்யக் குன்றியின் விதையைச் சேர்."

கண் நோய், பித்தம், காமாலை, வியர்வை, வீக்கம் வெப்பு நோய் என்பன போகும்.

*குப்பைமேனி*

"தந்தமூலம் பிணிதீதந்திடுபுண் சர்வவிட
முந்து குன்மம் வாதஉதிர மூலந்தினவு

சூலஞ் சுவாசத் தொடர் பீநிசம் கபம்போம்
ஞாலங்கொண் மேனிய தனால்."

பல் நோய், மூலம், தீப்புண், கடிகள், வயிற்று நோய், வாத நோய் இரத்தக்கசிவு, அரிப்பு சூலை, மூச்சுத்திணறல், சளி, கப நோய்கள் தீரும்.

*செங்கழுநீர் (குவளை)*

"உடற்குக் குளிர்ச்சியதாக உள்ளழலை மாற்று
மடற்கப அரோசகத்தை ஆற்றும் - கடற்கு
கவுநீர்க்குமிழ் இகழு முலையாய்
கழுநீர் மலரெனவே காண்".

கழுநீர்ப்பூ குளிர்ச்சி, உள் அழல், நீர்வேட்கை, கபம், வாய்க்குமட்டல் என்பன நீங்கும்.

*கண்டங்கத்தரி*

"காசம் சுவாசம் கதித்தசய மந்தமனல்
வீசுசுரம் சன்னி விளைதோடம் - மாசுருங்கா
லித்தரையுணில் காவெரிகாரஞ் சேர்கண்டங்
கத்தரி உண்டாம் ஆகில் காண்."

சயம், இரைப்பு, இளைப்பு, மந்தம், அனல் சுரம், சன்னி, குற்றங்களால் ஏற்பட்டவை என்பன நீங்கும்.

*குரோசணி ஓமம்*

"வெகுமூத்திரம் வாதம் வீரியநட்டம்புண்
நுகுபேதி உட்கடுப்பினோடே - மிகுகரப்பான்
தீராக்கபம் இவைபோம் செய்யக் குரோசனிஎன்றால்
வாரா மயக்கமுறு மால்."

அதிகச் சிறுநீர், வாதம், மிகுதாது வெளியேறல், புண், பேதி, கரப்பான், ஆசனக்கடுப்பு, கபநோய்கள் தீரும்.

*கொய்யா*

"திரிதோடம் சென்னித் திரும்ப அரோசி
பொருமாந்தம் வாந்தி பொருமல் - கரப்பானும்
மெய்யாப்பரவு மலமெத்தவிடும் போகமுண்டாம்
கொய்யாப் பழத்தினால் கூறு."

முக்குற்றம், தலைநோய், வாய்க்குமட்டல், மாந்தம், வாந்தி, வயிற்றுநோய், கரப்பான், தாதுபெருகும், மலக்கட்டு என்பன தீரும்.

*கொடிமுந்திரி*

"வெப்ப உருசி தாகம் விரணம் சுவாசகய
மெய்ப்புடைய பித்த இரத்தபித்தம் செப்பு
மடிமந்த மேகமதமும்போம் சின்னக்
கொடி முந்திரிக் கனிக்கு கூறு.

வெப்பு, சுவை, நீர்வேட்கை, புண், இரைப்பு, இரத்த பித்தம், பித்தநோய், மேகம், மயக்கம் என்பன தீரும்.

*கொழுஞ்சி*

"மாந்தம் அகற்றும் வயிற்று உப்பிசம் தவிர்க்கும்
மாந்தகணச் சுரத்தை மாற்றிவிடும் - சேர்ந்தசிறு
வாதநோயோட்டும் வகைக் கொழுஞ்சிப் பட்டையது
மாதரசே நீயும் உணர்வாய்."

மாந்தம், வயிற்றுப் பொருமல், கணம், சுரம், வாதம் என்பன தீர்க்கும்.

*கையான்*

"குரல்கம்மல் காமாலை குட்டமொடு சோபை
உரல்பாண்டு பன்நோய் ஒழியும் - நிரல்சொன்ன
மெய்யாந்தரை யொத்த மீளியண்ணு நற்புலத்து
கையாந்தகரை ஒத்த கால்."

குரல்வளம் கெடுதல், காமாலை, தோல் நோய்கள், வீக்கம், வெளுப்பு, பலவேறு நோய்கள் என்பன நீங்கும்.

*கோவை**

"வீக்கம் அகற்றும் நஞ்சைவீட்டு நீர்ப்பேதிதரும்
போக்கு மதுவை அழற்புண் ஒழிக்கும்."

வீக்கம், நஞ்சு, கழிச்சல், அழல், புண் என்பன நீங்கும்.

*கோடகசாலை*

"கோடகசாலைக்கு கொடிய அனல் மேகமொடு
போடகங் கிரந்தி குட்டம் புண்ஆறும் - நாடகஞ்செய்
ஐயபித்த வாயு மலர்வரம் விரணம்போம்
பொற்புற்ற பொன்னே புகல்."

மிகவெப்பு, மேகம், கிரந்தி, தோல் நோய்கள், புண், கபம், பித்தம், வாயு என்பன தீரும்.

*கோட்டம்*

"திட்டிக்கவுன் கடுகளஞ் சென்னிநாவா
தெறிப்பின வெப்பத்தைப் புதாவர்த்த மூதை
மூட்டிஎழு மூளை விரணம் சுவாசகாச
மூடிகத்தோடம் அரவுவிடம் கண்மேகம்

---

*பாடல் வரிகள் குறைவாக உள்ளன.

கட்டிய கல்லிவிட பாகம்பூத
கணம்பால கிரகமொடு தாது நட்டம்
சொட்டிவரு பிரமிபித்த இவை ஒருங்கே
தொலையும் விரண நாரிக்கு சுகப்பேராமே."

கண், தாடை, தலை, வெப்பம், மூலமுளை, புண்கள், இரைப்பு, இளைப்பு, குற்றம், பாம்பு நஞ்சு, கண் நோய், மேகம் விலகும்.

*சதுரக்கள்ளி*

"கரப்பான் சொறியும் கடியும் கபமும்
முரப்பான் குன்மத்தையும் மொழிக்கும் - நிரைப்பான்
பேதிதரும் சீதமென்ற பேச்சகற்றும் பூவுலகில்
சாது சதுரக் கள்ளிதான்."

கரப்பான், தோல் வியாதிகள், கடி நஞ்சுகள், கபநோய்கள், வயிற்றுவலி, கழிச்சல், குளிர்ச்சியைப் போக்கும். கழிச்சல் உண்டாக்கும்.

*சங்கஞ்செடி*

"வீக்கம் கரப்பான் விதாகக் கிரந்தி குன்ம
மூக்குமிக சூலைவாயுவோடு பித்தம் - தாக்குவிடம்
வீறுமோ கண்டுலங்கும் வீசுபசி ரத்தமுண்டாம்
கூறு சங்கு வேரிலைக்கு."

வீக்கம், கரப்பான், கிரந்தி, குன்மம், மூக்கு நோய்கள், சூலை, வாயு, பித்தம், உயிரினக்கடி, நஞ்சுகள் என்பன தீர்க்கும். மிக்க பசியையும், இரத்தத்தையும் அதிகமாக்கும்.

*சதகுப்பை*

"வாதமொடு சூதிகாவாதம் சிரநோய்
மோது செவிநோய் கபநோய் மூடுசுரம் - மோதுகின்ற
மூலக்கடுப்பு முதிர்பீநிசப் போக்கு
ஞாலச் சதகுப்பை நாடு."

வாதம், சூதிகா நோய், தலை நோய்கள், செவி நோய்கள், கப நோய்கள், சுரம், மூலம், ஆசனக்கடுப்பு, நீண்ட பீனிசம் என்பன போகும்.

*சந்தனம்*

"கோதில் சந்தனம் சீதோட்டினம் கொண்டிருக்கும் சந்த
வாதபித்த மிவையும் மனப்பிரமை - ஓதுசுரம்
மேகந்தணி தாகம்வெப்பு சொறியும்போம்
மா கந்த குறுதியாம்."

குளிர்ச்சி, வாத, பித்த நோய்கள், உளப்பிணி, சுரம், நீர்வேட்கை, சொரி என்பன தீர்க்கும். உடலுக்கு வன்மையைத் தரும்.

*சங்குப்பொடி*

"கசிவாம் இரத்தபித்தம் கண்நோய்கள் ஏகும்
பசியாறும் வாதம் பறக்கும் - இசிவுடனே
தங்குமுனா விரணந்தான் அகலுமே வெள்ளைச்
சங்கமது உண்டா யிற்றான்."

இரத்தக்கசிவு, இரத்த பித்தம், கண் நோய்கள் தீரும், பசி தீரும், வாத நோய்கள், இசிவு, புண்கள் அகலும்.

*சாதிக்காய்*

"தாதுநட்டம் பேதி சர்வசியஞ்சிர நோய்
ஓது சுவாச காசமும் கிராணி - வேதோ
டிலக்காய் வரும்பிணிபோ ஏற்றமயல் பித்தம்
குலக்காய் அருந்து வார்க்கு."

ஆண்மைக்குறைவு, பேதி, சிரநோய், இரைப்பு, இளைப்பு, கழிச்சல், மயக்கம், பித்தம் என்பன தீரும்.

*சாதிபத்திரி*

*"சாதிதரும் பத்திரிக்கு தாபசுரம் தணியும்*
*ஓதுகின்ற பித்தம் உயரும்காண் - தாதுவிருத்தி*
*உண்டாகும் கிராணியோ ஓதக்கழிச்சலறும்*
*பண்டாங் குரையே பகர்."*

அழல் சுரம், தாது, பித்தம் அதிகமாகும். கிராணி, கழிச்சல் போகும்.

*காரீயம்*

*"பன்மரநஞ்சு அக்கிநோய் பகர்ந்த அவிரணம்*
*குன்மம் கால்சூலம் குதவிரணம் - சன்மம்*
*பெருநாகமேகப் பிணி சுரம் இவற்றைக்*
*கருநாகமே தீர்க்கும் காண்."*

தாவர நஞ்சு, அக்கி இரணம், குன்மம், சூலை, வாயு, என்பன தீரும்.

*காந்தம்*

*"காந்தத்தால் சோபை குன்மம் காமிலமேகம் பாண்டு*
*சேர்ந்ததிரிதோடம் வெட்டை சீதங்கா - ஓய்ந்தபசி*
*பேருதிரம் கண்ணோய் பிரமிய நீராமையும் போ*
*ஒரினிறை ஆயுள் உறுமுன்."*

வீக்கம், குன்மம், வெள்ளை நோய், பாண்டு, முக்குற்ற நோய்கள், மேகம், உதிர நோய், கண்ணோய், பிரமியம், நீராமைக்கடி என்பன தீரும்.

*சாதிலிங்கம்*

"ஆதிஇரதவுருக்கதனால் சாதிலிங்கம்
மோதி இரத்தக் குணமுற்றுடலில் - தீதுபுரி
குட்டங்கிரந்தி கொடுஞ்சூலை வாதமுதல்
உட்டங்கு நோய்களை ஓட்டும்."

சாதிலிங்கம், குட்டம், கிரந்தி, கொடிய சூலை, வாதம் உள்தங்கும் நோய்கள் தீரும்.

*சிவதை*

"உள்ளமலமும் உதாவர்த்தமும் வயிற்றைக்
கொள்ளுபித்த வாதம்போம் கூறுங்கள் - பிள்ளைகட்கு
செப்புக்கிரகமும் போம்தேனே உலகத்துட்
டப்பிற சிவதைக்குத் தான்."

மலக்கட்டு, குடல் வாயு, பித்தவாதம், குழந்தைகளுக்கான கன்ம நோய் விலகும்.

*சிறுலவங்கப்பட்டை*

"சன்னலவங்கப்பட்டை தான்குளிர்ச்சி உண்டாக்கு
மின்னு இரத்தக்கடுப்பை ஈர்க்குங்காண் - முன்னமுறு
முந்திக் கடுப்பகற்றும் உள்மூலப்புண் போக்கும்
கந்தமிகு பூங்குழலே காண்."

சிறுலவங்கப்பட்டை இரத்தக் கழிச்சல், உள்மூலம், மூலவெடிப்பு, கடுப்பு என்பன போக்கும்.

*கண்டுபரங்கி (சிறுதேக்கு)*

"கண்டுபரங்கி எனும் சிறுதேக்குண்டால்
காலெங்கே பித்தமெங்கே கபந்தானெங்கே
தொண்டுதொட்டு தொண்டர் சுவாசகாச மெங்கே
சுரமெங்கே வெறியெங்கே தொனிநோய் எங்கே

மீண்டுபுரி பீநிசநீர்க்கோவை யெங்கே
வெளிநீர் உண்ணீர் எங்கே விரல்கால் எங்கே."

வாயு, பித்தம், கபநோய்கள், இரைப்பு, வெறிநோய், குரல்வளை நோய், பீனசம், சளி என்பன தீரும்.

*சிற்றாமுட்டி வேர்*

"அத்திசுர முதலனந்த சுரம் பித்தமும்போம்
மெத்தவிழிக் கொளியாம் வீறு தைலத்திற்காம்
நற்றாமரை தருவு நாடும் எழில்திருவே
சிற்றா முட்டித் தூரைச் செப்பு."

என்பு சுரம், அனேக வகை சுரநோய்கள், பித்த நோய்கள் என்பன விலகும். கண்களுக்கு ஒளியைத் தரும். தைலத்திற்கு உதவும் இதன் வேர்.

*சிறுகாஞ்சோரி வேர்*

"சிறுகாஞ் சோரிவேர் சிலேத்தும வாசத்தைக்
குறியாத முச்சுரக் குரத்தை - சொரியும்
கரப்பான் சிறுசிரங்கைகாலே தாகத்தை
உரப்பாகச் சாடுமென் றோது."

கப நோய்கள், முக்குற்றச் சுரங்கள், கரப்பான், நீர்வேட்கை என்பன தீரும்.

*சிறுபசலை*

"போகமிகக் கொடுக்கும் போர்செய் கபத்தைப் பெருக்கும்
ஆகமதில்தாக அனலைத்தணிக்கும் - மாகுடரின்
மன்னுமலமிளக்கு மாறா வுரிசை தரும்
தின்னும் சிறுபசலைத் தேர்."

பெண் சேர்க்கையின் நேரத்தைக் கூட்டும், கர்பப் பிணிகளையும், வெப்பத்தையும் தணிக்கும், மலத்தை இளக்கி வெளிப்படுத்தும்.

*சிகைக்காய்*

"மூக்கின் சிகிச்சைக்கு முக்கியமாய் பேதியைஉண்
டாக்கு வமனத்தையு அழைப்பிக்கும் - தேய்க்கும்
வகைநெய் சிக்கைப் போக்கும் மாதரசே நாளும்
சிகைக் காயதனைத் தெரி.

மூக்குத் தூளில் சேரும். வாந்தி, பேதியைத் தரும், எண்ணைப் பிசுக்குகளைப் போக்கும்.

*சிவனார் வேம்பு*

"சாய்க்குழிப்புண் பழம்புண் சர்மக்குட்டம் பிளவை
தீக்கடுக்கால் வன்பெருநோய் சிந்துமா - நோய்க்கு
விதையாதி வேம்பினால் மெய்யழகு காலை
உதையாதி வேம்பினால் உண்."

குழிப்புண், பழம்புண், தோல் நோய்கள், கட்டிகள், வாயு, தொழுநோய், பெரிய நோய்கள் என்பன தீரும்.

*சிறுகுறிஞ்சான்*

"சிறுகுறிஞ்சாவாதமொடு சீதத்தை நீக்கும்
மறு உதிரமில்லாத மாதர்க்குறு உலகில்
அத்திசுரமும் அகாலக் கடிவிடமும்
தத்தி அகலத் தகர்க்குந்தான்

வாதசுரம் சந்நி மாறாக் கபசுரமும்
பூதலம் விட்டோடப் புரியுங்களாண் - மாதேகேள்

அக்கர நோய்தீர்க்கு அதிசுரம் தாகம்போம்
தக்க சிறுகுறிஞ்சா தான்."

வாத சீதம், மாத விலக்கம், என்புசுரம், பல், வேறு வகையான கடிவிடங்கள், வாதசுரம், சந்நி, கபசுரம், வாய்ப்புண், மகுசுரம், நீர்வேட்கை என்பன தீரும்.

*சிறுகீரை*

"கண்புகைச்சல் நேத்திரநோய் காசம் படலம்
புண்கிரிச்சுரம் சோபை பொங்குபித்த - மண்பரவுரச
தாவரவிடங்களும் போதாழாத் திருவுண்டாம்
கூறுசிறுகீரை தனைக் கொள்."

கண் நோய்கள், கண்காசம், படலம் என்ற புரை நோய், புண், சிறுநீர்த்தடை, வெளுப்பு நோய், பித்தம், தாவர நஞ்சுகள் தீரும்.

*சிறுதேக்கு*

"ஆண்டுபடாச் சீதசுரம் கடுப்பு எங்கே
அழலை அகநோ யெங்கே அறைகுவீரே."

சீதசுரம், உடல் கடுப்பு, வெளுப்பு, மறைந்து தாக்கும் நோய்கள் நீங்கும்.

*சிற்றரத்தை*

"வாந்தி பித்தம் கரப்பான் வாதம் சிரரோகம்
சேர்ந்த கபமுத்தோடம் சீதமொடு - நேர்ந்தசுர
அற்றதைக் காட்டிவரு இருமலும் தீரும்
சிற்றரத்தை தன்மருந்தால் தேர்."

வாந்தி, பித்த நோய்கள், தோல்நோய், வாதநோய், தலை நோய்கள், முக்குற்றநோய்கள், குளிர்ச்சி என்பன தீரும்.

*சிறுநாகப்பூ*

"சிறுநாகப் பூவினது செங்கைதனைச் சொல்வோம்
குறியோடு மேகத்தை கொல்லு - நெறியைவிட்டு
தீதாற்செல்வாயுவைத் தீர்க்கும் இருமல்போகும்
கோதாய் இதை அறிந்துகொள்."

சிறுநாகப்பூ வெள்ளை நோய், வாயு, இருமல் என்பனவற்றைத் தீர்க்கும்.

*சீனி*

"சீனிசர்க்கரைக்குத் தீராத வன்சுரமும்
கூனிக்கும் வாதத்தின் கூட்டுறவு - மேனிற்கு
வாந்தியொடு கிருமி மாறாத விக்கலுமே
போம் திசையை விட்டுப்புரண்டு."

வன்சுரம், வாதநோய்கள், வாந்தி, கிருமி, விக்கல் என்பன தீரும்.

*சீந்தில் சர்க்கரை*

"ஏங்கு பெருந்தாகம் என்புருக்கி இரத்தபித்தம்
ஓங்கும் மதுமேக உட்டிணம்போம் - ஓங்கிவளர்
கூந்தல் மடமாதே சஞ்சீவிஎனும்
சீந்தல் சர்க்கரையின் சீர்."

அதிக நீர்வேட்கை, என்புருக்கி, இரத்த பித்தம், மதுமேகம், வெப்பு என்பன தீரும், சீரான சீந்தில் சர்க்கரையால்.

*சீரகம்*

"வாந்தி அருசி குன்மம் வாய்நோய் பீலிகம் இரைப்
பேந்திருமல் கல்லடைப்பி ஆஞ்சனமும் - சேர்ந்தகம்ம
லாகு குடாரிஎனு மந்தக் கிரகணியும்
போசன குடாரியுண்ணப்போம்.

வாயுவொடு நாசிநோய் வன்பித்தம் சேராது
காய நெகிழாது கண்குளிரும் - தீயமலர்க்
காரளகப் பெண்மயிலே கைகண்டத்தித்தினையும்
சீரகத்தை நீதினமும் தின்."

வாந்தி, சுவையின்மை, குன்மம், வாய்ப்புண், ஈரல் நோய்கள், இரைப்பு, இருமல், கல்லடைப்பு, நீரடைப்பு, வாயு, மூக்கு நோய்கள், மிகுந்த பித்தம் என்பன தீரும். பசியை உண்டாக்கும்.

*செப்பு நெரிஞ்சில்*

"செப்பு நெருஞ்சில் திரிதோடம் போக்கிவிடும்
வெப்பு முதலனைத்தும் வீட்டும்காண் - செப்பரிய
சுக்கில மேகம் போக்கும் தொல்லையனல் மாற்றும்
மிக்கு மருந்தாம் விரி."

முக்குற்ற நோய்கள், வெப்பு, சுக்கிலமேகம் என்பனவும், மிகுவெப்பம் போக்கும்.

*செங்கதாரி*

"செங்கதாரி கட்டைக்கு தீராத வன்மேகம்
பொங்கிவரு கிரந்திப்புண் புரைகள் - தங்குகின்ற
சந்திக சிலேத்துமம் தனித்த மகாவாத
முந்திகை விட்டோடும் மொழி.

கொடும் மேகநோய்கள், கிரந்திப்புண், புரை நோய், மூட்டுவாதம், கபநோய்கள், பெரியவாத நோய்கள் என்பன தீரும்.

*செம்பை*

"கட்டியொடு வீக்கம் காயது நீரேற்றம்
ஒட்டிவரு வாதகபம் ஓட்டுவது - தொட்டுவிடு
பம்பஇலை வேலைவென்ற அங்கண்மடமாதே
செம்பை இலைவேலை யெனத்தேர்.

கட்டி, வீக்கம், புண், பீனிசம், வாத, கப நோய்கள் என்பன தீரும்.

*செவ்வந்தி*

"தலை மயக்கம் சுற்றலறு மட்சிக் கொளியாம்
தலைமயிருண்டாம் அலைருஞ்சாரும்- நிலைமணமா
ஒவ்வந்தி வான்பிறையை ஒத்தநுதல் திருவே
செவ்வந்திப் பூவதனைச் செப்பு..

மயக்கம், தலைக் கிறுகிறுப்பு, தலைமுடி வளர்தல் என்பனவும், மணமும் ஏற்படும்.

*செங்கழுநீர்ப்பூ*

"உடற்குளிர்ச்சியதாம் உள்ளுழலை மாற்றும்
மடற்கப அரோசகத்தை ஆற்றும் - கடற்கு
ளெழுநீர்க் குமிழி இகழுமுலையாய்
கழுநீர் எனவே காண்."

உடல் குளிர்ச்சியடையும், உள்ளுறுப்புகளில் உள்ள வெப்பத்தை ஆற்றும். கப நோய், வாய்க் குமட்டல் என்பன போக்கும்.

*செந்தாமரை*

"பருத்தநல் தாமரைப் பூபலவாந்தி நோயைத்
துரத்திவிடும் இன்னுஞ் சொலவோ - கரத்தால்
எடுத்தணைக்கக் கண்குளிரும் ஏகும்சுரம்
எடுத்த தாகமும் போமெண்."

தாமரைப்பூ வாந்தியை நீக்கும், கண்களுக்குக் குளிர்ச்சியைத் தந்து, நீர்வேட்கை, சுரநோய் இவைகளைப் போக்கும்.

*சூதம்*

"விழிநோய் கிரந்தி குன்மமெய்ச்சூலை புண்குட்ட
அழிகாலில் விந்துவினா அத்தை வழியாய்

விரியும் விதியாதும் புரியுநோயெல்லாம்
பிரியும் விதியாது மிவை."

கண்நோய்கள், கிரந்தி என்ற பால்வினை நோய், குன்மம், சூலை, புண், தோல் நோய்கள் என்பன நீங்கும்.

"கிருமிகயஞ்சூலை கிரந்தி திமிர்வாதம்
பொருமு குன்மமூலம் புண்ணைத் - தருமா
கரிமுக குட்டக்கடி விடபாகம்போம்
எரிமுகிக்கு சுகமா எண்."

புழு, இளைப்பு, சூலை, கிரந்தி, திமிர்வாதம், வயிற்றுப் பொருமல், குன்மம், மூலம், குட்டம், கடிநஞ்சு என்பன போகும்.

*சிறுபூளை*

"பாண்டு பெரும்பாடு பகர்மூத்திரக் கிரிச்சரம்
பூண்ட திரிதோடம் இவைபோகுங்காண் - தாண்டிப்
பரிய வேளைத் துரத்தும் பாரவயிக் கண்ணாய்
சிறிய பீளைக்குச் சிதைந்து.

வெளுப்பு நோய், பெரும்பாடு, சிறுநீரக நோய்கள், முக்குற்றம், இரத்தகணம் என்பன தீர்க்கும்.

*கற்பேதி*

நீரடைப்பு கல்லடைப்பு நீங்காக் குடல்சூலை
பேரிட இரத்தகணம் போக்கும் காண் - வாரி இரக்கும்
பூண்முலையே கேளாய் பொருந்தும் சிறுபீளை
யாமிது கற்பேதி அறி."

கல்லடைப்பு, நீரடைப்பு, குடல்சூலை, இரத்தகணம், கற்பேதி என்பன நீங்கும்.

*சித்திர மூலம் (கொடிவேலி)*

"கட்டிவிரணம் கிரந்தி கால்கள் அரையாப்பு
கட்டிசூலை வீக்கம் தால்மூல - முட்டிரத்தக்
கட்டு நீரேற்றம் கனத்த பெருவயிறு
கட்டும் கொடி வேலியாம்..

சித்திரமூலம், இரணம், கிரந்தி, அரையாப்பு, சூலை, வீக்கம், வாயு, மூலம், இரத்தக்கட்டு, பெருவயிறு என்பன போகும்.

*தலசு முருங்கை*

"தலசு முருங்கை தழையதற்குக் கேளா
அவசியம் பீனிசமுள் நாக்கு - உவசர்க்கி
ஐஐந்துவாச கபம் அண்டாது குற்றிருமல்
வையம் விட்டேகும் வழுத்து..

பீனிசம், உள்நாக்கு நோய், கபம், இருமல் என்பன தீரும்.

*தரா*

"புண்கிரந்திகட்டி பொருசந்நிக் கீடமும் போம்
கண்புகைச்சல் காசம்கதிக்கும் என்பார் - பெண்களுக்கு
பாலும் பெருகு உள்ளேபற்று உதிரச் சிக்கல்விடும்
மேலும் தராவின் இலைக்கே.

புண், கிரந்தி, கட்டி, மிகுசுரம், கடிகள் தீரும். கண் புகைச்சல், காசம் என்பன பெருகும். பெண்களுக்கு மாதவிடாய் கேடுகள் தீரும் இலையால்.

*தாளி*

"தாய்ப்பாலுக் கொப்பான தாளிப் பனஞ்சோற்றால்
வாய்ப்பாகும் வன்மை மலமிறுகும் - காயதனால்
ஓய்ச்சலறும் மெய்பெருகும் ஒண்தொடியே கஞ்சியதாக்
காய்ச்சி உண்பார்க்கு லகில் காண்."

தாய்ப்பாலுக்கு நேராகும். தாளிப்பனையின் பால். வன்மை சோற்றால் பெருகும். மலக்கட்டு ஏற்படும். கஞ்சியாக உண்ணலாம். உடல் பெருக்கும்.

*தான்றிக்காய்*

"ஆணிப்பொன் மேனியழகு ஒளியுமிகும்
கோணிகொள் வாதபித்தக் கொள்கைபோம் தாணிக்காய்
கொண்டவர்க்கு மேகம் அறும்கூறா அனல்தணியும்
கண்டவர்க்கு வாதம்போம் காண்."

உடல் அழகு ஒளி பெறும், வாதம், பித்தம், மேகம், வாதநோய்கள் விலகும்.

*தேற்றான்* (Strychnos Potatorum)

"பிரமிவெள்ளை வெப்புபசி பேராக்கடுப்போடு
எரிகிரிச்சரம் புண்ணுமின்றாம் - வருமந்த
தேற்றான் கொட்டைக்கஃதோ திட்டிமருந்தாகும்
கூற்றாங்கண் மாதேநீ கொள்."

பிரமேகம், வெள்ளைநோய், வெப்பம், உட்சூடு, மந்தம், எரிச்சல் உள்ள நீரக நோய், புண் என்பன தீரும்.

*நன்னாரி* (Hemidesmus Indicus)

"நன்னாரிவேரை நறிக்கி யரைத்து அதன்
வின்னாரியூனால் வெதுப்பியே - தின்னவெறி
தோணாது கற்றாழைச் சோற்றில் கலந்துண்ண
காணாது வண்டு கடி."

நன்னாரி வேரை, கற்றாழைச் சோற்றுடன் கலந்துண்ண வண்டுக்கடி தீரும். வேரை அரைத்து வெதுப்பித்தின்ன வெறி விலகும்.

*நல்வேளை*(Gymandropsisi Pentaphylla)

"சிரநோய்வலி குடைச்சல் தீராசைத்திய
முர நோயிவைக ளொழியு - முரமேவும்
வில்வேளைக் காயும் விழியாய் பசிகொடுக்கும்
நல்வேளை தன்னை நவில்."

தலை நோய்கள், வலி, குடைச்சல் என்பன தீரும். பசியைத் தரும்.

*நந்தியாவட்டை*

"காசம் படலம் கரும்பாவை தோடம்
பேசுவிழிநோய் கடமைப் பேர்ப்பதன்றி - ஓசைதரு
தந்திபோலே தெரித்துசாரும் மண்டைநோயகற்று
நந்தியா வட்டப்பூ நன்று."

கண் காசம், படலம், கருவிழிபாவை நோய், கண் நோய்கள் தீரும்.

*துத்தி*

"மூலநோய்கட்டி முளைபுழுப் புண்ணும் போகும்
சால வதக்கிக் கட்டத்தையலே - மேலுமதை
எப்படியேனும் புசிக்கிலெப்பிணியும் சாந்தமுறு
இப்படி இத்துத்தி இலையை..

துத்தி இலையை வதக்கிக் கட்ட, மூலநோய், மூலமுளை, புழுக்கள் உள்ள புண்கள் நீங்கும். உண்ண எல்லாவிதமான நோய்களும் விலகும்.

*துருஞ்சி* (Citrus Medisa)

"அருசி கெடும்பித்தம் அகலும் ஐயந்தீரும்
முரிசை யுறும் கபமோடும் - சரசமுற
காதளவும் பாய்ந்தவிழிக் காரிகையே நற்கொமட்டி
மாதுளையின் பொற்கனியை வாழ்த்து..

சுவையின்மை பசித்தீயைக் குறைக்கும் பித்த நோய்கள், கப நோய்கள் என்பன தீரும்.

*தும்பைப்பூ*

"சீறுகின்ற பாம்போடு சில்விடங்கால் சென்னிவலி
ஏறுகபமாந்த இருக்குமோ - நாறுமலர்க்
கொம்பனையை மாதே குளிர்சீத சந்நிவிடு
தும்பையிலை என்றொருகால் சொல்".

பாம்பு நஞ்சு, சிறு நஞ்சுகள், தலைவலி, கபநோய், மாந்தம், குளிர்சுரம், சந்நி என்பன தீரும்.

*தூதுவளை*(Solamum Trilobaturn)

"ஐயமுடன் பித்தமகலும் அரோசகம் போம்
தையலே வாதம்தணியும் காண் - வையமிசை
ஓதும் குடல்வாதமொடு மலமொழியும்
தூதுளங் காயுண்ணச் சொல்."

கபம், பித்தம், வாய்க்குமட்டல், வாத நோய், குடல் வாதம் என்பன நீங்கும். மலக்கட்டு விலகும்.

*தாளிசபத்திரி*

"நாசிக்களப் பிணிகள் நாட்பட்ட காசம்சு
வாச அருசிவ மனங்கால் - வீசிவரு
மேகமந்த அத்திசுர விட்டேகும் தாளிசத்தா
ஆகும் சுகப் பிரசவம்."

மூக்குப் பிணிகள், காச நோய், இரைப்பு, சுவையின்மை, வாந்தி, மேகம், மந்தம், என்புசுரம் என்பன தீரும்.

*தாழை*

"மடிசோற்றான் மங்கையருக்கு மாதாந்த பூப்பாம்
வெடிச்சப் பூவால் பசியும்மீறும் - தடித்தமுறை
சுக்கிலத்தை நெய்யைத் துலக்குவிக்கும் சோபைஎனு
அக்குலத்தை நீக்கு மறி."

தாழைச்சோறு மாதவிடாயைச் சீராக்கும், அதிகப் பசியைத் தரும், ஆண்மையைப் பெருக்கும். சோபை என்ற வீக்கத்தை நீக்கும்.

*திருகுகள்ளி*

"வாதமுடக்கலும் வன்கிரந்தி குட்டம் போம்
சீதமொழியும் கிருமி சேராவாம் - மாதே
பருகு பக்கநோயுடனே பாழ்கரப்பான் தீரும்
திருகு கள்ளிப் பாலால் தெளி."

வாதமுடக்கம், கிரந்தி, குட்டம், குளிர்ச்சி, குரல்கட்டு, குடல்புழுக்கள், பக்கசூலை, கரப்பான் என்பன தீரும்.

*துளசி*

"ஐயம் வயிற்றுறை அத்திசுரம் தாகமும்போம்
பையசுர மாந்தம்பறக்குங் காண் - மெய்யாக
வாயின் அரோசகம்போம் வன்காரம் சூடுள்ள
தூய துளசிதனைச் சொல்."

கபம், வயிற்றுளைச்சல், என்புசுரம், நீர்வேட்கை, சுரம், மாந்தம், வாய்குமட்டல் என்பன தீரும் துளசியின் காரச்சுவையால்.

*நத்தைசூரி* (Spermacosae Hispida)

"சுத்தமுறு மாநத்தை சூரியெனும் பூண்டதனால்
மெத்த நலமே யுண்டாம் மேதினியில் - வித்திற்கோ
வெப்பமுறுபேதி வெண்சீதக் கட்டுபோம்
துப்பறிந்த மாதே நீசொல்."

உடலின் நலம் பெருகும். விதை, வெப்ப பேதி, வெள்ளை சீதக்கழிச்சல் என்பன நீங்கும்.

*நாகமல்லிகை*

"சீராரு நாகமல்லி கைச்சுவையைக் கண்டக்கால்
தீரா நமைச்சல் செறிபுடை கணிராருஞ்
சன்னப் புழுச்சங்கள் தங்காவாஞ்சம் புதை
அன்னக் குயிலனையாய் வாழ்த்து."

நாகமல்லிகை வேரால், அரிப்பு, அடர்ந்த புடைப்பு, ஆறா சிறிய புழுக்கள் என்பன தீரும்.

*நாய்வேளை* (Gleome Viscosa)

"வாதமுடல் கடுப்பு வன்சூலை காதிரைச்சல்
ஓதமிகு பீனிசமோடும் காண் - போதெறிந்து
காய்வேளைக் காயும் விழிக்காரிகையே வையமதில்
நாய் வேளையுண்டு நவில்."

வாத நோய்கள், உடல் கடுப்பு, கொடிய சூலை, காதில் இரைச்சல், வழியும் சளி நோய் என்பன நீங்கும்.

*நாவல்*(Syzygium Jambulanumm)

"மாந்தம் விளைவிக்கும் வலிகரப்பானுண்டாக்கும்
சேர்ந்ததொரு நீரிழிவும் சேருமோ? - நாந்தலொடு
வாயுவும் கடுப்பும் வருங்கொதிப்பும் தாகமும்போம்
தூயநாவல் பழத்தால் சொல்."

நாவல்கனி, மாந்தத்தைத் தரும் வலி, கரப்பான், நீரிழிவு, வாயு, உடல் கடுகடுப்பு, இரத்தக்கொதிப்பைப் போக்கும். நீர்வேட்கைக் குறையும்.

*நாரத்தை*

"பித்தவழிக் குன்மமறும் பேராத தீபனமாம்
வித்தானதாது விளைந்திடுங் காண் - முத்திணைத்த
வாரத்தைத் தாங்குமுலை ஆயிழையே எக்காலும்
நாரத்தையின் கனி யினால்."

பித்தகுன்மம் தீரும். ஆண்மை பெருகும். பசி உண்டாக்கும்.

*நாணல்* (Saecharum Spontaneum)

"வாயுபித்தம் வாந்திநீர் மாறும் அதிதூல
நோயுள்எழும் வயிற்றுநோய் கலங்கும் ஓயாத
ஈளையொடு பாண்டு எதிரா அடங்கிநிற்கும்
நாளு நாணல் கரும்பினால்."

வாயு, பித்தம், வாந்தி, அதிக பருமன், வயிற்று நோய், நீண்ட நாள் இரைப்பு, வெளுப்பு நோய் என்பன தீரும்.

*நிலாவாரை* (Senna Indica)

"நிலாவாரையின் குணந்தான் நீகேள் மயிலே
பலமூல வாயுவெப்பாவை - சிலகிரந்தி
பொல்லாத குன்மம் பொருமு மலக்கட்டு முதல்
எல்லாம் அகற்றும்என எண்."

மூலவாயு, வெப்பம், கிரந்தி, வயிற்றுப்புண், மலக்கட்டு என்பன நீங்கும்.

*நிலப்பனைக்கிழங்கு* (Curculigobrchioi)

"மேகவனல் தணியும் வெண்குட்டந்தான் விலகும்
போக மிகவுமுறும் பொற்கொடியே - போகாத
சூலை மேகங்களொடு துன்னும் கரும்புள்ளியும்போம்
சால நிலப்பனைக்குத் தான்."

மேக அனல், வெள்ளை நிறம், சூலை, மேகம், கறுப்புப் புள்ளிகள் என்பன மாறும். ஆண்மை உண்டாகும்.

*நீர்முள்ளி* (Asteracantha Iongitolia)

"*பாண்டு குளுப்பைஅறும் பார்த்த நீரேற்ற*
*மாண்டுவிடு நீர்க்கட்டு மாறும்காண் - பூண்டதொரு*
*வீக்கமெல்லா நீராய் விடுமே நீர்முள்ளிக்கு*
*தாக்கு மயில்விழியாய் சாற்று..*

வெளுப்பு நோய், குளுப்பை, நீர்க்கட்டு, வீக்கம் என்பன மாறும்.

*நுணா* (Morinda Umbellta)

"*பட்டை கரப்பனொடு பாரசிலேத்தும் சுர*
*ஒட்டிநின்ற புண்கிரந்தி ஓட்டும்காண் - மட்டஅரை*
*யேந்து நுணாவின் நிலைமாந்தம் தீர்த்துநல்ல*
*காந்திதரும் மேகம் அடுங்காண்*".

இதன் பட்டை கரப்பான், கபசுரம், புண்கள், கிரந்தி, மாந்தம் என்பனவற்றைப் போக்கி, உடலுக்கு அழகு தரும். மேகத்தைத் தீர்க்கும்.

*பழம்பாசி*

"*மஞ்சள் காமாலையொடு மாந்தம் கணச்சூடும்*
*விஞ்சுகட்டி சோகைக்கணம் மேதினியில் - அஞ்சிடவே*
*குத்தலுறு மூலம்குத நெகிழ்ச்சி சீதமும்போம்*
*நத்து பழம்பாசி குணம்நாடு*".

பழம்பாசி மஞ்சள்காமாலை, மாந்தம், கணம், கணச்சூடு, கட்டி, சோகை, மூலம், அடி வெளித்தள்ளல், குளிர்ச்சி என்பன நீங்கும்.

*பருத்தி* (Gossypiom Indicam)

"பருத்திஇலை மொட்டி ரண்டைப்பாலில் அரைத்துண்ண
வருத்துகின்ற மேகமெலாம் மாறும் - பருத்த
இரத்தபித்தத்தோடு விரணவீக்கம் போம்
மரத்தலிதழ் மாதே அறை..

பருத்தி இலை, மொட்டு என்பனவற்றைப் பாலில் அரைத்துக் குடிக்க, மேகம், இரத்த பித்தம், இரணம், வீக்கம், மரத்துப்போதல் என்பன நீங்கும்.

*புரசுவேர் (பலாசு* - Butea Frondosa)

"புரசுவாதம் பித்தம் பொங்குகபம் குன்மம்
கிருமியுடனே கிராணி - பெருவலிநோ
யோட்டுமதி தீபனத்தை உண்டாக்கும் அப்பொழுதே
திட்டிய வேல்கண்ணாய் தெளி..

வாதம், பித்தம், கபம், குன்மம், குடற்புழு, கிராணி, மிகுவலி என்பன தீரும். பசித்தீயைத் தூண்டும்.

*புளியாரை* (Gxalis Corniculata)

"பித்தமயக்கமறும் பேருலகின் மானிடர்க்கு
நித்தமருள் வாதகப நேருமோ - மெத்தனவே
மூலக்கிராணிவிடு மூலவுதிரமறுங்
கோலப் புளியாரைக்கு."

பித்த மயக்கம், வாத, கப நோய்கள், மூலக்கிராணி, ஆசனவாயிலிருந்து இரத்தம் வெளியாதல் என்பன தீரும்.

*பூவரசு*

"குட்டம் கடிசூலை கொல்லும் விடபாகம்
துட்ட மகோதரமும் சோபையொடு - கிட்டிமெய்யில்
தாவு கரப்பான்கிரந்தி தண்மேகம் போக்கிவிடும்
பூவரசங்காய் பட்டை பூ."

குட்டம், நஞ்சுக் கடிகள், சூலைநோய், நஞ்சுகள், கொடிய பெருவயிறு, வீக்கம், கரப்பான், கிரந்தி, மேகம் என்பன தீரும்.

*பூண்டு*

"சந்நியொடு வாதத்தலை நோவு தாளின்வலி
மன்னிவரு நீர்க்கோவை வன்சீத - மன்னமே
யுள்ளுள்ளி காண் பாயுளைமூலரோகம்போம்
வெள்ளுள்ளி தன்னால் வெருண்டு."

சந்நிநோய், வாத நோய், தலைவலி, பூட்டுத்தாள் வலி, நீர்க்கோவை, சீதக்கழிச்சல், மூலம் என்பன நீங்கும்.

*பெரும்பீளை* (Aerna Lanata)

"பாடாண பேதியெனப்பன்னு பெரும் பீளைக்கு
மேடான வீக்கம் விலகுங்காண் - நாடறிய
பேய்பூதமும் பறக்கும் பேசில்பல பிணிபோம்
தூயோர் அறிவார் இதைச் சொல்."

வீக்கம், பேய் பூதக்கேடுகள் என்பன நீங்கும். பலவித பிணிகள் தீரும்.

*பெருஞ்சீரகம் - சோம்பு* (Pimpinella Anisum seeds)

"யோனிநோய் குன்மமுருட்சை மாந்தம் பொருமல்
பேனமுறு காசம் பீலிகஇரைப் - பீனஉரை
சேர்க்கின்ற வாதமும்போம்சீர்பெரிய சீரகந்தான்
மூக்கு நோயில்லை மொழி."

பெண் பிறப்பு உறுப்பு நோய்கள், வயிற்று வலி, மந்தம், காசம், இரைப்பு, ஈரல் தொடர்பான நோய்கள், வாத நோய்கள், மூக்கு நோய்கள் என்பன போகும்.

*பேராமுட்டி* (Pavonia odorata)

"வாதசுரம் தாகம் மதலைக் கணமாந்தம்
சீதசுரம் பித்தமெனச் செப்பணங்கு - மோதுநம்பாற்
சேரா முட்டிக்கேகும் செய்ய மடமயிலே
பேரா முட்டித்தூரைப் பேசு."

வாதசுரம், நீர்வேட்கை, குழந்தைகளுக்கு வரும் மாந்தம், கணம், குளிர்சுரம், பித்த சுரம் என்பன நீங்கும்.

*பேய்க்குமட்டி - ஆற்றுகுமட்டி* (Cirullus Colocynthis pod)

"கிடையெங்கே சோம்ப லெங்கே
கேடுறச்செய் வாதக்
கடையயெங்கே ஆற்றுக்கலிங்க
மடை திறக்கின்
அண்டை அடைசலெங்கே
ஆயிழையார் சூதகந்தி
உண்டை உடைச்சல்
எங்கே ஓது."

வாத நோய்கள், சோம்பல், மாதவிடாய் நோய்கள் என்பன தீரும்.

*பேய் அத்தி* (Ficus Hispida)

"வெடிப்பை மேகப்படையை வீறிலரு குட்டத்
தடிப்பை முளைரணத்தைச் சாடும் - படிக்குன்மயி
லன்ன ஒளிர்மாதரசே எங்கும் கனைகணிறை
பன்னமுறு பேயத்திப் பால்..

வெடிப்பு, மேகத்தடிப்பு, தோல் நோய்கள், மூலமுளை, புண் என்பன போக்கும்.

*பேரரத்தை* (Alipinia Galanga)

"வாத இசிவுவலி சந்நி பித்தகபம்
சீதசுரம் இரண சென்னிநீர் ஓதுபல
வாம் கடுப்பூப் பட்குமாறு ஓளியாரும்
ஈங்கடரும் பேரரத்தை யால்..

வாதநோய், வலிப்புகள், சந்நிபாதம், பித்த, கபநோய்கள், குளிர்சுரம், தலைநோய்கள் என்பன தீரும்.

*பொடுதலை* (Lippia Noditlora)

"பொடுதலையின் பேருரைத்தால் போராமப்போக்கு
மடுதலைசெய் காச மடங்கும் - கடுகிவரு
பேதியொடு சூலைநோய் பேசரிய வெண்மேகம்
வாதமும்போ மெய்யுரைக்கும் வாழ்த்து.

வயிற்று நோய்கள், கழிச்சல், காசம், பேதி, சூலை, வெள்ளை நோய், வாதம் என்பன தீரும்.

*பொன் முசுட்டை* (Cissam pelos pereira)

"வாதமொடு பித்தத்தை மாற்றுமே மாநிலத்தில்
சீதம் அகற்றும் தினவடக்கும் - மாதேகேள்
உண்டிக்குகம் வாசனையாய் ஓங்கிவளர் அனலை
கண்டிக்கும் பொன்முசுட்டை காண்.

வாதம், பித்தம் நோய்களை மாற்றும், குளிர்ச்சியை அகற்றும். அரிப்பு நீக்கும். நறுமணத்தை உணவுக்குத் தரும்.

*பொன்னாங்கண்ணி* (Aiternanthera sessiles)

"காசம் புகைச்சல் கருவிழிநோய் வாதமனல்
கூசும்பிலிகம் கங்குதாங்குர நோய் - பேசிவையா

என்னாங் காணிப் படிவமே மாம்செப்ப என்னைப்
பொன்னாங்காணிக் கொடியைப் போன்று.

காசம், கண் புகைச்சல், கண்ணிலுள்ள கருவிழியில் உள்ள நோய்கள், வாதம், அனல், ஈரல் நோய்கள் என்பன நீங்கும்.

*பொன் முசுட்டை - பேயாவாரை* (Cassia Ceeidantalia)

"வெடிப்புத் துவக்குதிரல் மேகப்படைகள்
தடிப்பு தினவுகடி தங்கா - அடிக்கடிகிங்
கென்னா அறைய விசையா எழிலணங்கே
பொன்னா வரையதனைப் போற்று.

தோல் வெடிப்பு, மேகத்தடிப்பு, அரிப்பு, நஞ்சு உள்ள கடிகள் என்பன தீரும்.

*மலைவேம்பு* (Melia Azedarach)

"மலட்டுப் புழுவும் வயிற்றின் வலியும்
மலட்டு வாயும் போமடங்கி - கொலட்டு
முலைவேம் சினவேல் கண்ஓதிமமே கோளாய்
மலை வேம்பின் பேரை வழுத்து".

மலடு, வயிற்று வலி, மலட்டு வாயு, சூதகக்கேடுகள் என்பன தீரும்.

*மணத்தக்காளி* (Solanum Nigrum)

"காய்க்குக் கபம்தீரும் காரிகையே அவ்விலைக்கு
வாய்க் கிரந்தி வேக்காடு மாறுங்காண் - தீக்கு
ஞணக்கிடு வற்றலுறு பிணியோர்க்காகும்
மணத்தக்காளி குள்ள வாறு."

கபநோய்கள், வாய்ப்புண், கிரந்தி என்பன தீரும். இதன் வற்றல் நோயாளிகளுக்கு உணவாகும்.

*மரக்காரை* (Randia Dumetorium)

"சுரமும் பொருமலும் போம் தொண்மயக்கு மில்லு
தரவூதற் போம் அறிவும்தங்கும் - பருகு
மரக்காரை மெல்லிதழ் வாயஞ்சுகமே நாளும்
மரக்காரையின் கனியை வாழ்த்து."

வயிற்று உப்பிசம், சுரம், மயக்கம், ஊதல் நோய் நீங்கி அறிவு ஏற்படும்.

*மருத மரம்* (Terminalia Arjuna)

"ஓதமெனும் நீரிழிவை ஓட்டும் பிரமேகம்
காதமென ஓடக்கடத்தும் காண் - போத
மயக்கமொடு தாகமாறா சுரத்தின்
தயக்க மறுக்கும் மருதந்தான்."

நீரிழிவு, பிரமேகம், மயக்கம், நீர்வேட்கை, சுரம் என்பன மருதமரம் தீர்க்கும்.

*மகிழம்* (Mimusops Elengi)

"தாதுவை நன்மெய்யழகை சந்நியை உண்டாக்கிவிடும்
சீதள மென்பார் கலிக்கம் செய்மருந்தாம் - வாதை
மலத்தை விழிதோடத்தை வல்விடத்தை வெப்பை
விலக்கு மகிழம் விதை."

கண்மை செய்ய இதன் சாறு பயன்படும். ஆண்மையையும், அழகையும்பெருக்கும். குளிர்சுரம், மலக்கட்டு,கண் நோய் கடிநஞ்சுகள், வெப்பம் என்பன நீங்கும்.

*மரமஞ்சள்* (Coscinium Fenestratum)

"அழன்ற கணமூலம் அருசி யுடனே
உழன்ற கணச்சுரமும் ஓடும் - சுழன்றுள்ளே

வீறுசுரமும் தணியும் வீடுமர மஞ்சளுக்கு
தேறுமொழி அனமே செப்பு."

கணம், மூலம், சுவையின்மை, கணச்சுரம் நீங்கும்.

*மாவிலங்கம்* (Cretaeva Religiosa)

"சுரங்கடியின் தோடம் தொலையாத வாதம்
உரம்பெறு விடங்கள் ஒழியும் - அரமும்
கருமா வடுவயிலும் கண்டஞ்சும் கண்ணாய்
ஒரு மாவிலங்குக் குரை."

சுரம், கடிநஞ்சு, முக்குற்றம், வாத நோய்கள் என்பன நீங்கும்.

*மிளகரணை* (Toddalia aculeta)

"ஐயமகற்றும் அசிரண வாதம் போக்கும்
செய்ய பித்தசூலைகளை தீர்க்கும்காண் - பெய்யவரும்
ஈளையிருமல் இரைபுப்புசம் தொலைக்கும்
நாளு மிளகரணை நன்று."

கபநோய்கள், செரியாமை, வாதம், பித்தம், சூலை, ஈளை, இருமல், நுரையீரல் நோய்கள் என்பன நீங்கும்.

*முடக்கொற்றான்* (Cordiospermum Halicacabum

"சூலைப்பிடிப்பு சொறிசிரங்கு வன்கரப்பான்
காலைத்தொடு வாயும் கண்மூலமூம் - சாலக்
கடக்கத்தான் ஓடிவிடும் காசினியை விட்டு
முடக்கற்றான் தன்னை மொழி."

முடக்கற்றான் பெயரைக்கூற சூலை, பிடிப்பு, தோல் நோய்கள், வாயு, மூலம் என்பன தீரும்.

*முசுமுசுக்கை* (Mukia Scavirlla)

"இருமலுட னீளை இரைப்பு புகைச்சல்
மருவுகின்ற நீர்தோடம் மாறும் - திருவுடைய
மானே, முசுமுசுக்கை மாமூலி அவ்விலையைத்
தானே அருந்துவர்க்குத் தான்."

இருமல், ஈளை, இரைப்பு, நீர்க்கோவை, புகைச்சல் என்பன தீரும்.

*வாதமடக்கி* (Delonixalata)

"பூவில் எரிச்சாலைப் பூண்டு இடுப்புவலி
கூவியழும் சூலை அனிலம் குறையும்."

இடுப்பு வலி, சூலை, வெப்பம் என்பன தீரும்.

*வாலுளுவை* (Celastrus Paniculatus)

"வயிற்றுக் கடுப்புவலி மாறாக் கிராணி
பயித்தியம் காசமலபந்தம் சகிக்கவொணா
சூதிகா வாதமும் போம் தொல்வாலுளுவை விதைக்
காதி நவசித்தர் மொழியாம்."

வயிற்றுக்கடுப்பு, வலி, தீராத கழிச்சல், உளப்பிணி, இளைப்பு, மலக்கட்டு, சூதிகால்வாதம் என்பன தீரும். இது நவசித்தரின் ஆதி சொல்லாகும்.

*விலாமிச்சவேர்* (Aegle Marmelos)

"மேகம் விழிநோய் எரிச்சல்வீறி இரத்தபித்தமொடு
தாமமத மூர்ச்சை பித்தம் தனிமயக்கம் - சோகம்
சிரநோய் இவையோடும் செய்யவிலாமிச்ச
கெரி சுரமுமில்லை இசை."

கண், மேக நோய்கள், உடலெரிச்சல், இரத்தபித்தம், நீர்வேட்கை, உளப்பிணிகள், மயக்கம், தலைநோய்கள், சுரம் என்பன தீரும்.

*விட்ணுகிரந்தி* (Evalvuls alsinoides)

"செய்யமாலின் கிரந்தி தீராத வல்லசுரம்
தையமறுக்கும் அலை தணிக்கும் - வெய்யகப
காச இருமலையும் கட்டறுக்கும் வாதத்தால்
ஊசலாடும் பிணி போக்கும்."

விட்ணுகிரந்தி வலிமையான சுரம், வெப்பம், இளைப்பு, இரைப்பு, இருமல், வாதநோய்களைத் தீர்க்கும்.

*வில்வம்* (Aegle Marmelos)

"மாலூரத்தாலை மடக்கநேர்போ மாந்தவரா
மாலூரத்தாலை மடிவப்போன் மாலூரம்."

(தேரையர் வெண்பா)

"வில்வத்தின் வேருக்கு வீறுகுன்ம வாயுகபம்
சொல்லவொணா பித்தம் தொடர்சோபை - வல்லகப
தாகசுரம் நீரேற்றம் சந்நியொடு மெய்வலியும்
வேகமொடு நீங்குமே."

வில்வவேர் வயிற்றுவலி, வாயு, இரைப்பு, பித்தத்தால் ஏற்பட்ட வெளுப்பு நோய், கபநோய்கள், நீர்வேட்கை, சுரம், நீர்க்கோவை, சந்நி, உடல்வலி என்பன தீர்க்கும்.

*விளா* (Feronia Elephanturm)

"மன்னன் முதல்மூவர் மாறுபாடில்லாமல்
உன்ன நினைத்து உதவுதலால் - பன்னி
செபித்தவுடன் ஆண்மை சேரவுந்திடலால்
கபித்த அவிழ்த கற்பம்."

முக்குற்றங்களைச் சமப்படுத்தும், கற்பமாகப் பயன்படும் ஆண்மையைத் தரும்.

*வெள்ளை அல்லி* (Nymphaeastilata)

"மேகமறும் புண்ணாறும் விட்டேகும் நீரிழிவு
தாகந்தணியும் தழலகலும் - வாகான
மெல்லியலே ஆயுள்மறை வேதியர் எலாமுரைக்கும்
அல்லிமலரால் அறி."

மேகம், புண், நீரிழிவில் ஏற்படும் நீர்வேட்கை, வெப்பம் என்பன நீங்கும்.

*வெட்டிவேர்* (Coeus Vettiveroides)

"பித்ததாகம் சுசிகாமிலம் கறைபித்தம் அனல்
ரத்திடு குட்டம் சிரநோய் களமடி தாதுநட்டம்
மந்தம் அனல்புண் வன்மூர்ச்சை வரிவிழிநோய்
வித்திரமேகத்தின் கட்டியும் போம்வெட்டி வேரினுக்கே..

பித்தம், நீர்வேட்கை, காமாலை, வெப்பம், தோல்நோய்கள், தலைநோய், ஆண்மை வெளியாதல் , பசியாமை, தீப்புண், மயக்கம், மேகக்கட்டிகள், கண் நோய்கள் என்பன தீரும்.

*வெள்ளறுகு* (Enicostermmalittorale)

"குன்மமொடு வாய்வு குடல்வாதம் சூலைஇவை
சென்மம் விட்டோடிச் சிதையுங்காண் - வன்முலையாய்
உள்ளூறு கிராந்திசொறி ஒட்டிய சிரங்குமறும்
வெள்ளறுகு தன்னை விரும்பு.

வயிற்று நோய், வாயு, குடல்வாதம், சூலை, கிரந்தி, தோல் நோய்கள் என்பன நீங்கும்.

*வெந்தயம்* (Trigonelle foenumgracum)

"பிள்ளைக் கணக்காய்ச்சல் பேதிசீதக் கழிச்சல்
தொல்லை செய்யும் மேகம் தொலையும்காண் உள்ளபடி
வெச்சென்ற மேனிமிகவும் குளிர்ச்சியதாம்
அச்சமில்லை வெந்த யத்தின்காய்.

பித்தவுதிரம் போகும் பேராக்கணங்களும் போம்
அத்தி சுரம்தாகம் அகலுங்காண் தத்துமதி
வேக இருமலொலடு வீறுகாயம் தணியும்
போகமறும் வெந்தயத்தைப் போற்றும்."

குழந்தைகளுக்கு வரும் கணை, காய்ச்சல், கழிச்சல், நக்கழிச்சல், மேகநோய் நீங்கி, உடல் குளிர்ச்சியடையும். பித்த திரம், கணம், என்பு சுரம், நீர்வேட்கை, இருமல், இளைப்பு ன்பனவும் தீர்க்கும்.

*'ளாம்பிசின்*

"நல்ல விளாம்பிசினை நற்பாகம் செய்தருந்த
தொல்லை அதிசாரம் தொலைவ தொன்றே மல்லியரால்
வந்தவெள்ளை தன்னுடனே மாதர்பெரும்பாடும்
உந்து நீர்ப்போக்கு போம்உன்.

நீண்ட நாள் கழிச்சல், வெள்ளை நோய், பெரும்பாடு ஏபன தீரும்.

# வைத்திய அட்டவணை

*மேகசஞ்சீவி எண்ணெய்*

1. அறுகுதிரிநெல்லி ஆதண்டைநல் வேம்பு
திருகள்ளி சதிர்கள்ளி திரிநெருஞ்சில்
வெட்பு விலாமிச்சம்வேர் உவளை விசுவாசி
குட்டிவிளா விளா கோவை.

2. நன்னாரி பூந்தி நாக இருவேளையப்
பொன்னாங்கண்ணி வரப்பூலா - மின்னாவே
ஈரிலவு கற்றாழை இருகொத்தான் ஈராஞ்சி
ஓரிலைத் தாமரை பசலை ஓதி.

3. வன்னிரு முருங்கை மணத்தக்காளி விழுதி
சின்னி கருநொச்சி சிறுகுறிஞ்சா - சன்னியின்பூ
மாதுளை செம்முள்ளி மாவிலங்கம் சீந்தில்
தூதுவளை துளசி துத்தி.

4. கருக்கா வெதுப்படக்கி காக்கரட்டானத்தி
மருக்கா ஈசுரவேர் வாதரசு சிறுகீரை
கொய்யா வெண்நொச்சி கொடிமுந்திரி கமுகு
கையாந்துவரை பார் காரை.

5. நீர்முள்ளி, ஈர்ப்பூளை, நிலப்பனையாம் கெந்தி
சாரணை பேய்மிரட்டி சாணாக்கி பார்வில்வம்
உத்தாணி சடைச்சி உதிரங்குலுப்பாச்சி
தொட்டா சிணுங்கி வரட்சுண்டி.

6. பூவரசா மருதம் பிரமியும் செம்பருத்திகூவிளமாம்பழ
ஈரங்குன்றி மணி - கோவைநந்தி
மேனிப்பழம் பாசி விடத்துவரைக் களஞ்சி
சீனிப்பலா கிளுவை தேற்றான்.

7. முசுமுசுக்கை பேராமுட்டி நுணா சங்காய்
விசும்பு கருடன் கருவேப்பிலை ஈர்க்கு - வசம்பதுவாய்
கஞ்சா நிலை யாவாரைக் கட்டுக்கொடி பருத்தி
கஞ்சாக்கோரை மான கதலி.

8. பேய்க்குமட்டி இலந்தை பொன்முசுட்டை பிரண்டை
மூக்குரட்டை சித்திரமூல இண்டு - தாக்கிடவே
ஆடுதின்னாப்பாளை அமுக்ரா வல்லாரை
சூடு கொண்டை தாளினத்தைச் சுழி.

9. வெட்பாலை முட்காவேளை விட்ணுகாந்தி
பற்பாடகம் கோரை பாவட்டை தப்பாது
வண்டு கொல்லி ஆவாரை மகிழம் பொடுதலையாம்
கண்டங்கத்திரி சிறு காஞ்சொறி.

10. வட்ட கிலுகிலுப்பை மந்தாரை புங்கு தண்ணீர்
விட்டான்கிழங்கு தராய் வெள்ளெருக்கு கொடியுமாய்
அம்மனீர் பச்சரி ஆதிதிருநீறு பச்சை
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

11. நாகை எலுமிச்சை நாரத்தை தும்பை
வாகை முறுக்கு வாதமடக்கி வேகம்
சிறுசெருப்படி, புரசு சிற்றாமுட்டி வேகம்
பெருசெருப்படி எருக்கு பேயத்தி

12. ஆயி பெருமரவேர் அழிஞ்சி மிளகரணை
தாயி நறுவுளி செங்கதாரி நேயம்
போட பத்திரியுசில புளியாரை தென்னை
கிடநாரத்தை துருஞ்சி களா.

13. திருவர்த்தி காட்டுத்துவரை பனை எட்டி
கருவேல் தழுதாழை கருஞ்செம்பை
குருவாழத்தி சியாக்காய் ஈஞ்சு சிறுபசலைசெம்பை
துய்ய தாமரையின் அடித்தூர்.

14. ஆணப்பத்திரை அரசாமால் விழுது
நாணல் திருவல்லி நஞ்சடக்கி ஒணா
விச்சி தூரவெப்பை வேம்பாடம் வில்வம்
இச்சி இலைக்கள்ளி கொடி இச்சி.

15. செந்தாமரை குறட்டை சிறுவாளி சேங்கொட்டை
வெந்தயம் சரி இளவஞ்சி கந்தமாய்
பூதகரப்பானாம் பீநாரி செவ்வந்தி
வாதை நெடுலிங்கை கொடிமல்லி.

16. உள்ளலாத்தி முசுட்டை ஊசிமல்லி கடுக்காய்
வாள் வழங்கா பவழமல்லிகையும் தானைத்தூர்
செம்பு நாகை தாணி சிறுமல்லி நறுவி
இம்பூரா நெய்ச்சுண்டி இஞ்சி.

17. குடமல்லி வெண்கட்டுக்கொடி திப்பிலி உரை
மடக்கன்னி பாக்குறுஞ்சான் மருதுணையாம் கொடை
சிவதை எலிச்சுண்டி செங்கீரையி கிரந்தி உப்பை
சவரி பூனைக்காலி சாலி.

18. வாடாமல்லி பீங்கான் வலம்புரி கடலழிஞ்சி
ஆடாதோடை கொழுஞ்சியாம் அரசு ஊடாகு
பாதரி வலக்கொழுந்து பவழக்கொடி கலிக்கி
வேதமொழி ரோகிணி வால்மிளகு.

19. அதிவிடையம் கோட்டம் அக்கிரகாரம் மிளகு
அதிமதுரம் செவ்வியம் அகிலுமாம் துதிபெருகும்
சிறுதேக்கு காட்டாத்திப்பூ காரி சிற்றரத்தை
கறுவாத்தோல் வேலங் கசகசா.

20. கருஞ்சீரா சீரா கண்டத்திப்பிலி ஓமம்
பெருங்சிரா வாலுள்ள திப்பிலி சுக்கு சிறுவாகை
பூவளமாம் கோரோசனை தாளிச பத்திரி
வாவளஞ்சாப்பத்தி மரமஞ்சி

21. வெங்காய மிவுபோலவிரை வெந்தயம் வெள்ளை
வெங்காயம் குப்பை வெள்ளறுகு சிங்கியுமாம்
குங்குமப்பூ சாதிக்காய் பரங்கிப்பட்டை பிரப்
பங்கிழங்கு சிறு இலவங்கப்பட்டை

22. மாநிலத்து சஞ்சீவியில் வகைக்கோர்பலம் கடையில்
தானுரைத்த வகையில் பலந்தான் அரையாம்யான்
அனைத்துக்
காரியம் இதோ அருள்செய் கணபதி என்னுள்ளத்தில்
கோரினை செய்து இடித்துக் கொள்.

23. இடித்தவகை நிறைசெய்து
எண்ணெய்விடு ஒட்டி இரட்டி
பிடித்து கணபதிதாள்
பூசனைசெய் அடுத்தடுத்து
வைப்பாய் கதிர்புடமாய்
மண்டலமே ஊறியபின்
அப்பா சஞ்சீவி
இதென்றே அறி.

24. அறிவாய் இருபத்தோராகிய மேகமதில்
பிரியாது உழலும் பெருநோய்கள் குருவாகும்
சுத்தனே செறுவினை சொல்லத் தொலையுமோ
அத்தனைக் கத்தனை செம்பொன்னாம்.

*சீதளசஞ்சீவித் தைலம்*

25. பொன்னாங்காணி ஓரிலைத் தாமரை
வெண்பூளை சிறுகீரை நெருஞ்சி
வன்னிய மின்னார்த்து துருஞ்சி பழம்பாசி
எலுமிச்சம் பருத்தி வரட்சுண்டி இலவம்
நன்னாரி துத்தி முசுக்கை மிளகுநீர்
நற்சீரகம் பொன்முசுட்டை முசுட்டை
இன்னாவரையீர் வகையோர் பலம் பால்
இணைத்தெண்ணெயில் விட்டெரி செய்திறக்கே

*மேகவெட்டை, பிரமியம்தீர*

26. மிளகு மிருதார்சிங்கி மொச்சையுடன் மூன்று
குளவு விராகன்எடை ஒன்பதுவாம் - அளவுடனே
வேர்வேராய் தூளது செய்வகைக்கு வராகஎடை
சீர் நீராகார முரிசேர்.

27. சேரக் குழப்பித் தினமும் மூன்றுட்கொள்ள
பாரப் பிரமியமும் பறந்தோடும் - தூரவே
தப்பில்லாத பத்தியம் இதான்.

*சிவனார் வேம்பு செயநீர்*

28. மேகம்இருபத்தொன்று மீறிற்றானால்
மெய்பதங்கை வெண்கறுப்பு வெடிப்புண்ணாகும்
ஏகசிவனார் வேம்பு பலம் ஏழெட்டு
இரங்கு வங்கோய கந்தி பலமோ இரண்டு
காக நிறக் குன்றிமணி பல மூவைந்து
கறும் பொன்னாவரை விரை பலமூவைந்து
ஆகமகிழ் வல்லாதி பலமூவைந்து
அடவி கறுந்துவரை விரை பலமூவைந்து
ஐந்திவை இடி வேம்பும் கவசமாச் செய்து
ஆறுதுளைப் பாண்டத்துள் வைத்தேமூடி
தந்தியிது துறையடியில் கவசம் வைத்தே
தணலோர் இருபுற மண்சீலை செய்தே
வந்தனை செய்கெச புடமாம் ஒன்றைப் போடு
ஆறைந்து நாழிகையும் அணுகொண்ணாது
செந்தீயது ஆறியபின் வலமாய் வந்து
தரிசித்து மேகபதி செயநீராமே.

29. பாரென்ற செயநீர் கழஞ்சிடையோ ஒன்று
பவழரிசிப் பொரிமாவைச் சமனாய்க் கூட்டி
சேரென்ற வேலியம் போலாகும் தேவர்
சித்தருக்குச் செயமான சிவனார் வேம்பு

ஈரென்ற தந்தத்தோடு உரை செய்யாமல்
இருபோது மண்டலமோர் இதுவே கொண்டால்
பேரென்ற மேகமது சிதறிப் போகும்
பெண்களோடு பாய் மிதிய போகாதென்றே.

திருமதுரச்சீந்தல் பால்

உள்ளத்தில் காந்திதரும் கமலம் புண்ணா
உருகிநெய் பெருகவரும் வெடிமேகந்தான்
வெள்ளை சீந்தில்கொடி மங்களவாரத்தில்
மீதிலுள்ள செவ்வகத்தி பலம் ஈரைந்து
துள்ளச் சேர்த்திடி ஆவின்பால் ஆழாக்கு
துடியாக வடிநெய் ஈராழாக்காக
கொள்ளச்சேர சீனிப் பலமதில் தூவிக்
கொடுத்திடுவாய் நாள் மூன்றின் குணமதாமே.

31. குணமெனும் பத்தியமின் கூறக் கேளீர்
கோதையொடு பாய்மிதி போகாதிவ்வாறு
கணமெனும் மெய்யாசை ஒட்டாதே வெந்த
கலசத்தில் பவழரிசி அன்னம் பொங்கி
மணமென்றுஞ் சிறுபயிறு வறுசெய்துகொள்
வாய்ஓசை கதிரொளியும் வாயுவாகாது
செணமென்றும் புகையிலையும் கல்லுப்பும்
சேராதே இளவெந்நீர் சாதமுண்ணே.

# வைத்திய அட்டவணை

(பழைய உரை)

வேர்கள்:

அறுகுவேர்
அருநெல்லி
கீழாநெல்லி
ஆதண்டை வேர்
மலைவேம்பு வேர்
நிலவேம்பு வேர்
சிவனார்வேம்பு வேர்
வேம்பு வேர்
திருகுகள்ளி வேர்
கொடிக்கள்ளி வேர்
சதுரக்கள்ளி வேர்
ஆனைநெருஞ்சி வேர்
செப்பு நெருஞ்சில் வேர்
சிறுநெருஞ்சில் வேர்
வெட்டி வேர்
விலாமிச்சம் வேர்
வேலா வேர்
குவளை வேர்
இருவாட்சி வேர்
குட்டிவிளாவேர்
பெருவிளாவேர்
விளாவேர்
நன்னாரி வேர்
பூந்திவேர்
நாகமல்லிகைவேர்
நல்வேளைவேர்
பொன்னாங்கண்ணிவேர்
வரப்பூலாவேர்
நீர்ப்பூலாவேர்
முன்னைவேர்
மூங்கில்வேர்
முள்நிலவுவேர்
இலவுவேர்
கற்றாழைவேர்
முடக்கொத்தான்வேர்
வழக்கொத்தான்வேர்
நாயிராஞ்சிவேர்
ஓரிலைத்தாமரைவேர்
பசலைவேர்
உதியன்வேர்
வன்னிவேர்
முருங்கை
தவசிமுருங்கை
மணத்தக்காளி
விழுதி
சின்னி
கருநொச்சி
சிறுகுறிஞ்சான்
சன்னிப்பூ
மாதுளை
செம்முள்ளி
மாவிலங்கம்
சீந்தில்கொடி
தூதுவளை

துளசி
துத்தி
கருக்கா
வெதுப்படக்கி
காக்கரட்டான்
அத்தி
மருக்காரை
ஈச்சுரவேர்
பாதரசுவேர்
சிறுகீரை
கொய்யா
வெண்நொச்சி
கொடிமுந்திரி
குமிழ்
கையான்
பார்
காரை
நீர்முள்ளி
பெரும்பூளை
சிறுபூளை
கிரந்திநாயகம்
வெண்சாரணை
பேய்மிரட்டி
சாணாக்கி
உத்தாமணி
சடைச்சி
உதிரவேங்கை
குலுப்பாச்சி
தொட்டால்சிணுங்கி
வரச்சுண்டி
பூவரசு
மருதம்
செம்பருத்தி

குன்றிமணி
வெள்ளைக்குன்றிமணி
கோவை
நந்தியாவட்டை
குப்பைமேனி
பழம்பாசி
விடத்துவரை
கழஞ்சி
சீனிப்பலா
கிளுவை
தேற்றான்
முசுமுசுக்கை
பேராமுட்டி
நுணா
சங்கம்
ஆகாசகருடன்
கருவேப்பிலை
ஈக்கி
வசம்பு
கஞ்சா
நிலாவாரை
கட்டுக்கொடி
வெண்பருத்தி
கஞ்சாங்கோரை
மருள்
கதலி
பேய்க்குமட்டி
இலந்தை
பொன்முசுட்டை
பிரண்டை
மூக்குரட்டை
மலைமூக்குரட்டை
சித்திரமூலம்

இண்டு
ஆடுதின்னாப்பாளை
அமுக்கிரா
வல்லாரை
சூடுகொன்றை
தாளி
நத்தைசூரி
வெட்பாலை
முட்காவேளை
விட்ணுகிரந்தி
பற்பாடகங்கோரை
பாவட்டை
வண்டுகொல்லி
ஆவாரை
மகிழம்
பொடுத்தலை
கண்டங்கத்தரி
சிறுகாஞ்சோரி
வட்டகிலுகிலுப்பை
மந்தாரை
புங்கு
தராய்
வெள்ளறுகு
மகிழ்
நாகை
எலுமிச்சை
தும்பை
வாகை
முருக்கு
வாதமடக்கி
புரசுவேர்
சிற்றாமுட்டி

அவுரி
பெருசெருப்படி
எருக்கு
பேயத்தி
அழிஞ்சில்
மிளகரணை
நறுவுளி
செங்கதாரி
விடபத்திரி
உசிலை
புளியாரை
தென்னை
கிடநாரத்தை
விடதுருஞ்சிவேர்
கிளா
திருவாத்தி
பனை
எட்டி
கருவேலா
தழுதாழை
கருஞ்செம்பை
குருவாழ்த்தி
சீயக்காய்
ஈஞ்சி
சிறுபசலை
செம்பை
வெண்தாமரைதூர்
ஆனாவேர்
பதிராசவேர்
அரசம்விழுது
நாணல்
வெள்ளல்லி

செவ்வல்லி
மஞ்சல்லி
நஞ்சடக்கி
ஒணா
விச்சி
துரலெப்பை
வேம்பாடம்
வில்வம்
இச்சிவேர்
இலைக்கள்ளி
கொடி இச்சி
செந்தாமரை
குறட்டை
சிறுவாரி
சேங்கொட்டை
அஞ்சரிவேர்
இளவஞ்சி
ஏகந்தம்
மா - ஏகந்தம்
வஞ்சிக்கொடி
செவ்வந்தி
வாதை
நெடுலிங்கை
கொடிமல்லிகை
உள்ளலாத்தி
முசுட்டை
ஊசிமல்லிகை
கடுக்காய்
வழுதுணங்காய்
- பவளமல்லி
தாழைத்தூர்
சிறுமல்லிகை

நாயுறுவி
இம்பூரல்
நெய்சுண்டி
இஞ்சி
குடமல்லிகை
வெண்கட்டுக்கொடி
மடக்கள்ளி
பாக்குறுஞ்சா
மருவு
சிவதை
இலுப்பை
சவரி
பூனைக்காலி
கோடகசாலை
வாடாமல்லி
பீங்கான் செடி
வலம்புரிக்காய்
கடலிறைஞ்சி
ஆடாதோடை
யாத்தரசு
கொழுஞ்சி
பாதிரி
குறுந்து
பவழக்கொடி
கலிக்கி

**பச்சிலை**

மருக்கொழுந்து

**காய்**

வலம்புரக்காய்

**பட்டை**

பூதகரப்பான்
பூநாரி

**கொடி**

வெண்கட்டு
உப்பிலி

**கடைச்சரக்குகள்**

வசம்பு
தான்றிக்காய்
இஞ்சி
கொட்டைகிரந்தி
ஆத்தரசு
கடுகுரோகிணி
வால்மிளகு
அதிவிடையம்
கோட்டம்
அக்ரகாரம்
மிளகு
அதிமதுரம்
செவ்வியம்
அகில்கட்டை
சிறுதேக்கு
காட்டத்திப்பூ
கார்போக அரிசி
சிற்றரத்தை
பேரரத்தை (கருவாபட்டை)
ஏலம்
கசகசா
சீரகம்
கருஞ்சீரகம்
கண்டத்திப்பிலி
ஓமம்
பெருஞ்சீரகம்
வாலுளுவை அரிசி
அரிசித்திப்பிலி
சுக்கு
சிறுநாகப்பூ
கோரோசனை
தாளிசபத்திரி
வாய்விளங்கம்
சாதிபத்திரி
மரமஞ்சள்
வெங்காயம்
இசப்கோல் விதை
வெந்தய விதை
பூண்டு
சதகுப்பை

ஒவ்வொன்றும் வகைக்கு 10 எடை வீதம் எடுத்துக் கொள்ளவும்.

வெள்ளறுகு
கற்கடகசிங்கி
குங்குமப்பூ
சாதிக்காய்
பரங்கிப்பட்டை
பிரப்பங்கிழங்கு
சிறு இலவங்கப்பட்டை

3101 ஆக மொத்தம் வெண்பா 21க்கு மூலிகைவகை 3101. எண்ணைய் வகை 3101. இந்த மேகசஞ்சீவி வேர் வகைக்கு அரைப்பலம். இவை இரண்டையும் கூட்டி நான் நினைத்த காரியம் சித்திக்கும்படி, மகாகணபதியைத் தியானம் பண்ணிக்கொண்டு, இவ்வகையை இடித்து, நிறைகண்டு, ஒட்டி இரட்டியாக ஆமணக்கு எண்ணைய் விட்டு, பிள்ளையார் பிடித்துவைத்து, பூசை செய்து, ஒரு மண்டலம் சூரியபுடம் வைத்து சாப்பிட 21 மேகத்தின் விளைவாகிய சகல நோய்களுக்கும் குருவாகிய மேகசஞ்சீவி எண்ணெய் என்றவாறு. இந்த மேகசஞ்சீவி எண்ணெய் நிறைக்கு நிறை பசும்பொன் என்றவாறு வேதவியாசர் வாகடமுறை, கனகசபாபதி பிள்ளை எழுதிமுடிந்தது.முற்று.மகாகணபதி துணை.

## சீதள சஞ்சீவித்தைலம்

*சேரும் சரக்குகள்:*

| | |
|---|---|
| பொன்னாங்கண்ணி | வரட்சுண்டி |
| சிறுகீரை | இலவு |
| ஓரிலைத்தாமரை | நன்னாரி |
| வெள்ளைப்பூளை | துத்தி |
| நெருஞ்சில் | முசுமுசுக்கை |
| வன்னி | மிளகு |
| சுக்கு | வால்மிளகு |
| துருஞ்சி | சீரகம் |
| பழம்பாசி | பொன்முசுட்டை |
| எலுமிச்சம்பழம் | ஆவாரை |
| பருத்தி | நிலாவாரை |

இந்த 22 வகையையும் வேராகக் கொண்டுவந்து, ஆவின் பால் வார்த்தரைத்து, நிறைகண்டு, ஒட்டி இரட்டி, நல்லெண்ணைய் விட்டுக் காய்ச்சி, மெழுகு பதம் காணச் சஞ்சீவி தைலம் என்றவாறு முற்றும்.

## மேகவெட்டை, பிரமியம் தீர

| | |
|---|---|
| மிளகு | - வராகன் |
| மிருதார்சிங்கி | - வராகன் |
| வெண்மொச்சை | - வராகன் |

*செய்முறை :*

இம்மூன்று வகையும் தனித்தனியே வெவ்வேறு பொடி செய்து, சீலை வடியிட்டுக்கொண்டு, வகைக்கு 1 வராகன் எடை வீதம் மூன்று வராகன் நிறுத்துக்கொண்டு உரியாவது 1/8 படி நீராகாரம் விட்டுக் குழப்பிக் கொடுக்கவும். இப்படி மூன்று தினம் கொடுத்து அனுதினம் பத்தியம் உப்பு, புளி தவிர்க்கவும்.

## மேக ஊறலுக்கு வில்வத்திரி குணம்

வில்வ இலை சேர் நிழலில் உலர்த்திப் பொடி செய்து, சீரகம் பலம் பொடி செய்து, சீனி சர்க்கரை பலம் இம்மூன்றும் கலந்து மண்டலம் ஒரு வேளைக்கு 1/2 பலம் தின்ன, ஊறல் அறும். இச்சாபத்தியம். சிந்திக்கும் என்றவாறு இன்னும் ஊறலுக்கு.

**வேறு :** வாகையிலையை அரைத்து ஒருவேளைக்கு ஒரு கழக்கோடிக்காயளவுக்கு பிரமாணம் , ஒரு மண்டலம் தின்ன ஊறலறும் சித்திக்கும். இச்சாபத்தியம்.

**வேறு :** இன்னும் நில ஆவாரை சமூலம் இடித்து, சீரகம், சர்க்கரை கலந்து ஒருவேளைக்கு 1/2 பலம் தின்னவும். இச்சாபத்தியம்.

## அரையாப்பு தீர மருந்து

கருநெல்லி வேர் 2 பலம் நல்லெண்ணை விட்டரைத்து ஏழு நாட்கள் உட்கொள்ளவும்.

**பற்று**

இலுப்பக்கட்டியும் விளக்கெண்ணையும் சேர்த்து அரைத்துப் பற்றுப்போட துர்மாங்கிசம் (கெட்ட சதை வளர்ச்சி) ஆறும் என்றவாறு, இது கை கண்டது.

**சூதகற்பம்**

இரசம் 10 வராகன், எலியாமணக்குப் பாலில் எட்டு[1] அரைத்து, வில்லை செய்து, 5 நாட்கள் நிழலில் உலர்த்தி, உலர்ந்தபின் அகலில் வைத்து, மேல்மூடி, சீலை மண் செய்து வராகபுடம் போட்டால் பற்பம். இந்த பற்பம் மேகம் 21க்கும் வீரிய விருத்திக்கும். ஆவின் வெண்ணையில் சாப்பிடத்தீரும்.

**பூக்குடி நீர்.**

| | |
|---|---|
| செவ்வந்திப்பூ | கிராம்பு |
| பிச்சிப்பூ | அதிமதுரம் |
| செங்கழுநீர்ப்பூ | சீந்தில் தண்டு |
| செங்கழுநீர்க்கிழங்கு | முத்தக்காசு |
| தாமரை வளையம் | கல்மதம் |
| வெட்டிவேர் | சாதிக்காய் |
| இலாமிச்ச வேர் | சாதிபத்திரி |
| கடல் இறாஞ்சிப்பட்டை | பச்சைவெட்டு |
| ஆவாரை வேர்ப்பட்டை | சந்தனம் |
| வெள்ளிலோத்திரப்பட்டை | பூவெல்லம் |

*அளவு :* வகைக்கு உள்ளங்கையளவு.

*செய்முறை :* இது சேர, ஒரு பானையிலிட்டு நிரம்பத் தண்ணீர் விட்டுக் குறுவை நெற்பொறி, சற்று கல்கண்டு கூடப்போட்டு, ஈரமணல் பானையை வைத்து, தண்ணீர் 30 பங்கு, அதிமதுரம், பருத்திக்கொட்டை பருப்பு அரைத்து, பஞ்ச மரத்தின் பிசினும் கூட்டி, மருந்து மத்தித் தண்ணீரில் போட்டுக்கொடுப்பது.

---

1. இட்டு என்றாதல் வேண்டும்.

வேறு

ஆவிரைவேர்பட்டை
கடலிராஞ்சிப்பட்டை
கடலிராஞ்சிப்பட்டை வேர்
பருத்திக்கொட்டைப் பருப்பு

இதை மத்தித்து

முத்தக்காசு - கா. ப. (கால் பலம்)

| | |
|---|---|
| சாதிக்காய் | கல்நார் |
| சாதிப்பத்திரி | கல்மதம் |
| கிராம்பு | கருடப்பச்சை |
| அக்ரகாரம் | குரோசாணி ஓமம் |

என்பன வகைக்கு - வ. ப.

திரிபலா, விலாமிச்சம் வேர் - ரு (5 பலம்)
தேற்றான்கொட்டை - ரு (5 பலம்)

*செய்முறை* : இருநாழி நீர்விட்டு 1/8 பங்காகக் காய்ச்சி, வடிகொண்டு, குளிர ஆற்றிக்கொடுப்பது.

**சலக்கழிச்சல் தீர உண்டை**

*செய்முறை* : காரீயம் - க பலம் சட்டியிலிட்டு உருக்கி, இதில் ஆவாரைவேர்த் தோல் உரித்துப் பொடிசெய்து, அந்தப் பொடியைவிட்டுக் கிண்டி, ஒரு சாமம் கொண்டு வறுக்கவும். அதன்பிறகு, அவரை மொட்டு, பூ, அதன் பொடி போட்டுக் கிண்டி, சட்டுவம் கொண்டு வறுக்கவும். வறுக்க வறுக்க மயில் கழுத்தினைப்போல் வரும். ஆவாரைப்பூ, இலை, வேர், தோல், விதை பொடிசெய்துகொள்ளவும். அத்தி அல்லது அத்திமேல் புல்லுருவி மேல் உலர்த்திய பொடியும், விலாமிச்சன் உலர்த்திய பொடியும், கருவேலப்பிசின் உலர்த்தின பொடியும், காந்த பற்பமும் சரிகூட்டி, தேனில் கொள்ளவும். ஆறு தேசிக்காலம், இரண்டு தேசிக்காலமாகக் கொள்ளவும். ஆவாரைத் தைலத்தில் ஒரு மண்டலம், தினசரி 2 காசெடை உட்கொள்ளவும்.

## குடிநீர்

*சேரும் சரக்குகள்*

| | |
|---|---|
| கடலிறாஞ்சிப்பட்டை | - 4 பலம் |
| கடுக்காய் | - 3 பலம் |
| தான்தோன்றிப்பட்டை | - 3 பலம் |
| நெல்லிப்பட்டை | - 3 பலம் |
| கொன்றைப்பட்டை | - 3 பலம் |
| நல் ஆலப்பட்டை | - 3 பலம் |
| மருதம் பட்டை | - 3 பலம் |
| வில்வப்பட்டை மேல்பொறுக்கு போக்கியது | - 3 பலம் |
| தேற்றாம்பட்டை | - 3 பலம் |
| பொன்முசுட்டை வேர் | - 3 பலம் |
| நன்னாரி வேர் | - 3 பலம் |
| செங்கிளுவை | - 3 பலம் |
| சீந்தில் தண்டு | - 3 பலம் |
| வெள்வேல்பட்டை | - 3 பலம் |
| வெள்வேல் பிசின் | - 1 பலம் |
| கருவேலம்பட்டை | - 3 பலம் |
| கருவேலம் பிசின் | - 3 பலம் |
| கடுக்காய் | - 6 பலம் |
| தென்னம்பூ (இளம்) | - 3 பலம் |
| அத்திப்பட்டை | - 3 பலம் |
| கூட்டுக்கொடி | - 3 பலம் |
| பூலாம்பட்டை | - 3 பலம் |
| பூவரசம்பட்டை | - 3 பலம் |
| கருங்காலி வைரம் | - 3 பலம் |
| ஈச்சங்குருத்து | - 3 பலம் |
| ஆவாரை வேர்ப்பட்டை | - 3 பலம் |

*செய்முறை : 30* படி தண்ணீரில் துவைத்துப்போட்டு, இதில் ஒக்க *1* பலம் ஏலம், நற்சீரகம் *1* பலம், சாத்திரபேதி *3*

பலம், சாதிக்காய், கிராம்பு வகைக்கு 3 பலம், அவிச்சுக் கூட்டித் தட்டிப்போட்டுக் காய்ச்சி 10 படி உலர்த்தி, நீக்கி 20 படி ஆழாக்கு மறுபாதி ஆற்றிக்கொடுப்பது.

## வேர்மோர்க்குடி நீர்

| | |
|---|---|
| தேற்றாங்கொட்டை | - நாழி |
| நெல்லிக்காய் | - நாழி |
| தான்றிக்காய் | - 20 பலம் |
| விலாமிச்சி | - 20 பலம் |
| மாம்பட்டை | - 2 பலம் |
| தூதுவளை வேர் | - 2 பலம் |
| ஆவாரை வேர்ப்பட்டை | - 2 பலம் |

இதுசேரக்கூட்டித் துவைத்து முக்குறுணி, எருமை மோர் விட்டு, துண்டுகட்டி சூரிய புடமிட்டு, தவளமான (பொடி) போது உழக்கு, போது குடிக்கவும்.

## வேல் உண்டை சார்ந்த பற்பம்

*சேரும் சரக்குகள்:*

| | |
|---|---|
| விளாம்பிசின் | - 11 பலம் |
| தேற்றான்விரை | - 11 பலம் |
| வெள்ளைக்குன்றி வேர் | - 6பலம் |
| மனோசிலை | - 5 பலம் |
| இரதம் | - 2 பலம் |
| காரீயம் | - 14 பலம் |
| கோட்டம் | - 2 பலம் |
| அப்ரகச்செந்தூரம் | - 2 பலம் |

*செய்முறை :* காரீயமும், இரதமும் ஒன்றித்து எருமை மோர்விட்டரைத்து, 1/2 கழஞ்சு உண்டை திரட்டி, நிழலில் உலர்த்திக்கொள்ளவும். ஒவ்வொரு உருண்டை தேனிலும் கொடுப்பது, மோரிலும் கொடுப்பது.

வேறு

| | |
|---|---|
| காரீயம் | - 1 பலம் |
| (ஈயம்) யிதாம் | - 4 பலம் |
| உருக்கி ஒன்றித்தால் | |
| சாதி இலிங்கம் | - 4 பலம் |
| காந்தம் | - 4 பலம் |
| அப்ரகச்செந்தூரம் | - 4 பலம் |

இதுவெல்லாம் மோர் வார்த்தரைத்து, ஒரு மஞ்சாடி அளவு உண்டை செய்து, நிழலில் உலர்த்திக் கொள்ளவும். ஒரு உருண்டை மோரில் கொடுக்கவும். இப்படி அறிந்து தினசரி கொடுக்கவும்.

காரீயச்செந்தூரம் உட்கொள்ள

| | |
|---|---|
| முசுட்டை இலை | - 2 படி |
| ஆவாரைக்கொழுந்து | - 1/4 படி |
| சிற்றிலைப்பாலை | - 1/4 படி |

அரிந்து, நற்பிண்ணாக்குப் பொடியும், உழக்கு மோர்விட்டு அவியவிட்டு வைத்தரைத்து மோரில் கொள்வது.

திருவணை அடைச்சான் உண்டை

சாதிக்காய், கிராம்பு, வசுவாசி, சாதிலிங்கம், கல்மதம், கல்நார், கருடப்பச்சை, காந்தம், குரோசானி ஓமம், அக்ரகாரம், காசுக்கட்டி இவை வகைக்கு க பலம், ஊமத்தை விதை இ பலம் ஆக இதுவெல்லாம் ஓர்நிறை, ஆவின்பால் ஓர் நிறை ஆக இது இத்தனைக்கும் சரிவர ஆவிரைவிரை, இளவேக்காட்டுப்பொடியும் கூட்டி, எருமை மோர்விட்டு நன்றாக அரைத்து, ஒரு சுண்டைக்காயளவு உண்டை செய்து, நிழலில் உலர்த்திக்கொள்ளவும். உண்டை நறுக்கி, எருமைத் தயிரிலும், மோரிலும் அல்லது தேனிலும் கொடுப்பது.

## நீரிழிவுக்கு

| | |
|---|---|
| ஆவிரை வேர் | - 1 துலாம் |
| கடலிறஞ்சிராப்பட்டை | - 1/2 துலாம் |

குறுகத் தரித்து 15 மரக்கால் தண்ணீரில் போட்டுக்காய்ச்சி, 1/8 பங்காக வற்றிவிட்டு வடித்து

| | | |
|---|---|---|
| கோதுபோக்கிய பெருந்துத்தி விதை | - | உழக்கு |
| நிலவாரை விதை | - | உழக்கு |
| அவரை ஆவரைவிதை | - | உழக்கு |
| கறிமுசுட்டை விதை | - | உழக்கு |

இந்த விதைகளைப் புடமிட்டு (வறுத்து) நன்றாகப் பொடி செய்து,

சந்தனம், சாதிக்காய், சாதிபத்திரி, கரும்பு, குரோசானி ஓமம், பஞ்சுமரப்பிசின் வகைக்கு 10 பலம் பொடிசெய்து, முன்வந்த பொடியும், இந்தப்படி நிறைகூட்டி, அதக்கி கசாயத்தில் கலந்தூற்றிக் காய்ச்சி வற்றும்படியாக இறக்கிக் கொள்ளவும். வேறொரு பழைய பாண்டத்தில் வைத்துக்கொள்ளவும். ஒரு நெல்லியளவு அந்திக்கும், அடி வேரறுக்கும்.

வேறு

| | |
|---|---|
| தென்னை இளம்பூ | - உரி |
| ஆதிரை, பஞ்சமூலி | - 1 பலம் |
| சாத்திரவேதி | - 1 பலம் |
| சாதிலிங்கம் | - 1 பலம் |
| கல்மதம் | - 1 பலம் |
| கல்நார் | - 1 பலம் |
| கருடப்பச்சை - வகைக்கு | - 1 பலம் |
| நத்தை சுண்டி விதை | - ச பலம் |
| நத்தைசூரி விதை | - ச பலம் |
| நிலப்பனை கிழக்கு | - ச பலம் |
| பஞ்சு மரப்பிசின் | - சக |

பஞ்சு மர வேர் - கப (1 பலம்)
கோட்டம் - கப (1 பலம்)
சிறுதேக்கு - கப (1 பலம்)
பொன்னாவரை விதை - கப (1 பலம்)

இதுவெல்லாம் தென்னம்பூ சுற்றி ஓர் அரைப்பு, கடலிறஞ்சிப் பட்டை கசாயத்தில் ஓர் அரைப்பு, முத்தக்காசு கசாயத்தில் ஓர் அரைப்பு, அத்தித் தண்ணீரில் ஓர் அரைப்பு, இந்தக் கசாயங்கள் விட்டு, துவர்த்துவர அரைத்து, இலந்தைக் கொட்டை பிரமாணம் உண்டை பண்ணி, நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

ஆவரைபஞ்சமூலி (பஞ்சாங்கம்) - கப எடை (1 பலம்)
சிற்றிலைப்பாலை - கப எடை (1 பலம்)

வீதம் கொண்டு, எருமை மோரில் பிட்டவியலாக அவித்து, இதிலோர் உண்டையும் கூட்டி, மோர் விட்டரைத்து உழக்கு மோர் கொடுப்பது.

அந்திக்கு, ஆவிரைப்பொடி - கப (1 பலம்), பரங்கிப்பட்டை கப- (1 பலம்) உண்டை ஒன்று கூட்டி, தேனில் கொடுப்பது. இது தேனில் கொடுப்பது. இது சிலேத்துமத்தில் எடுத்த நீர்க்கழிச்சல் நிற்கும்.

## பித்த பிரமேகத்திற்கு

இந்த மருந்தினோடேகுங்குமப்பூ, கத்தூரி அல்லது கத்தூரிமஞ்சள், பச்சைக்கற்பூரம் சரியாகக்கொண்டு, அந்த மருந்தினோடே கூட்டிக்கொடுப்பது.

## வேறு

குறிப்பு: கத்தூரிக்குப் பதில், கத்தூரிமஞ்சள் பொடியை தருவது சரியல்ல, இரண்டின் குணமும் வெவ்வேறானது. வசக்கொடு பாரமறிந்து, நாள் என்றுக்கு மூன்று உருண்டையும்.

ஆவிரைவிதைப் புடமிட்ட பொடி -க, ஆகப்பொடியும், 3 உருண்டையும் கூட்டிப் பொடித்து தேனில் குழைத்து விழுங்கவும்.

சத்துமிண்ட முகனையானால் உண்டையும், மருந்தும், எருமைத்தயிரில் கூட்டி விழுங்கவும். இந்த உண்டை, ஆவாரை பஞ்சமூலி ஒரொன்று கழஞ்சு வீதமாக எருமை மோரில் விட்டவித்து, இந்த உண்டையும் கூட்டியரைத்து உள்ளுக்கு எருமை மோரில் கொடுப்பது.

### அபின்மாற்று

காஞ்சிரங்கொட்டை (எட்டி) 6 எண், உள் நஞ்செடுத்துப் போட்டு, திப்பிலி மூலம், கத்தூரி மஞ்சள் ஒரு. இவையொக்க சரிசரிக்கொண்டு கஞ்சா இலைச்சாறு விட்டரைத்து, சுண்டைக்காய் பிரமாணம், நிழலில் உலர்த்தி ஒரு உண்டைத் தேனில் கொள்ளவும்.

### சலக்கழிச்சல் தீர

வெள்ளீயம் 5 பலம், புதுச்சட்டியிலிட்டு உருக்கி, முகத்திலே சங்குப்பொடி - ரு பலம் போட்டு வறுக்கப் பற்பமாகும். இந்த பற்பம் இரண்டும் சரிகூட்டி, சீலை வடிகொண்டு காலமே, ஒரு பணவெடை தேனில் கொள்ளவும். 21 வகையான பிரமியமும் தீரும்.

### சலக்கழிச்சல் தீர

| | |
|---|---|
| வெள்ளி | - ரு பலம் (5) பலம், |
| சூதம் | - 2 பலம் (2 பலம்) |

வெள்ளியை, நறுக்கித் தெளியிமுகத்திலிரத்தை ...... ஒன்றித்தால் தகடாய்த் தட்டி மோர் விட்டரைக்கவும்.

சாதிலிங்கம் குரோசனி ஓமம் மகரந்தம்
சாதிக்காய் லசுவாசி காசுக்கட்டி
சோதிலங்கு அக்காரகாரம் பூத்தம்
மிற்றுவங்கே ஒரொன்று நாற்கழஞ்சு
நீதிவங்கு அப்பு பச்சை செந்தூரந்தான்
வகைப் படியே இருகழஞ்சு வகுத்துச் சொன்னோம்

சொன்னபடி விரும்பன்னி
துலங்க அனைத்தும் கூட்டிப்பொடி நாரத்தில்
மன்னு சிறுமஞ்சாடிய . . . . . . . . . யதாக
வாகுடனே அறிந்திடிலோ மாதே நீகேள்
மூன்று வினையால் எழுந்த மேகந்தானும்
மூவேழு வகையுமுடந்தீரும் திண்ணம்
மன்னுதித்த கவி ஆராய்ந்தந்த
மருவிய சஞ்சீவிதனில் மருந்துதானே.

**செந்தூரம்**

| | |
|---|---|
| சாதிலிங்கம் | அக்ரகாரம் வகைக்கு சட்டி $^{1}/_{8}$ |
| சாதிக்காய் | காசுக்கட்டி சட்டி $^{1}/_{8}$ |
| சாதிபத்திரி | கரதம் |
| கிராம்பு | அபின் - 12 $^{1}/_{8}$ |
| குரோசானி ஓமம் | ஊமத்தை விதை - கப |

புடமிட்டு நறுக்கிப்பொடி செய்து, ஒரு சிறு சுண்டைக்காய் அளவு நீரில் குழைத்து, நாவில் படாதே விழுங்கவும். அந்திக்கு அவ்வண்ணம் கொள்ளவும்.

---

குறிப்பு: மூலத்தில் பாடல் 83, 84, 85 ஆக இடம் பெற்றுள்ளது.

உரைத்த காரீயம் இரசம் சிந்தூரம் கொள்ள
நிரைத்த தடம் . . . . . .   . . . . . .
பட வளமையாய் கொணர் . . . . . . . . .
. . . . . ல் கற்பூரம் புனுகு மடை
படா சலா கையில் செலுத்து நுரைத்த
நல்லெண்ணைய்க் குளுமையாய் வைத்து
நுகர்ந்ததை மூழுகுதல் செய்யே.

நல்லெ அதிமதுரம் நற்சீரங்கன்ன
உல்லாச நெல்லி முந்திரிப்பருப்புப் பருப்பும்
வல்லாவரையின் மாவதும் கூடக்
சொல்லா இத்துடன் நாலத்தொருபங்குசீனி
கூட்டி ஒருமண்டலமும் கொள்வார்களாகில்
சேட்டுமமும் வாதமொடு பித்தமிவை தீரும்
நாட்டிலுள்ள உட்டிண சூலைகளும் நன்றாக
ஒட்டிவிடு ஒட்டிவிடும் உண்மை.

**நீர்க்குறி - நெய்க்குறி (தேரன்)**

*சிறுநீரின் இலக்கணம் : ஐந்து*

நிறம், எடை, நாற்றம், நுரை, குறைதல்

*சிறுநீரின் வண்ணம்*

மஞ்சள், சிவப்பு, பச்சை, கறுப்பு, வெள்ளை.

| | |
|---|---|
| வைக்கோல் மஞ்சள் நிறம் | - அசீரணநோய் |
| நாரத்தம்பழ மஞ்சள்நிறம் | - நன்நிலை |
| மஞ்சள் + சிவப்பு நிறம் | - வெப்பம் |
| தீ நிறச் சிவப்பு நிறம் | - அதிக வெப்பம் |
| மஞ்சள்+குங்குமப்பூ சிவப்பு | - மிகவும் வெப்பம் |
| பச்சை நிறம் | - குளிர்ச்சியால் ஏற்பட்டது |
| நீலநிறம் (கரு) | - நஞ்சால் ஏற்பட்டது. |

| | |
|---|---|
| நீலம் | - வாதநோய் |
| நீலம்+தடித்திருத்தல் | - வாதபித்த கபம் கெடுதல் |
| சொக்கிவைப்பச்சை | - வாதபித்த கபம். |

**சுவடி விவரம்**

சுக்கிரவார அர்த்தமண்டல சுபதினத்தில் "மேகநிதானம்" எழுதி முகிழ்ந்தது. ஆதிசைவ குலோத்திலகம் சிவசுப்பிரமணி தேசிகர் சுகித் லிகிதம்.

# வைத்திய அட்டவணை

## மேகவாகடம்

# செய்யுள் முதல் குறிப்பு

**மேகவகை**

*சாம்பசிவம் பிள்ளை அகராதி*

1. நல்கந்தன்
2. இந்திராங்கன்
3. அருசிகன்
4. இரத்த வர்ணன்
5. தேன் வர்ணன்
6. உருத்திராங்கன்
7. சலதோத்திரன்
8. சிலாங்கன்
9. பச்சை வர்ணன்
10. சம்பிராசன்
11. அனந்தன்
12. நீலகண்டன்
13. அதிபிரமன்
14. சுத்தன்
15. இரத்தின வர்ணன்
16. தன வர்ணன்
17. மதுமேகன்
18. புஷ்பராகன்
19. என்புருக்கி

**வேறு**

*வாதம் - 4*

வசாமேகம்
மஜ்ஜை மேகம்
சாத்திர மேகம்
அஸ்திமேகம்

*பித்தம் - 6*

சாரமேகம்
காளமேகம்
மஞ்சிஷ்டாமேகம்
நீலமேகம்
அரித்திராமேகம்

இரத்தமேகம்

*கபம் - 20*

1. உதகமேகம்
2. சாத்திரமேகம்
3. பிட்டாமேகம்
4. சீகடாமேகம்
5. சன்னர்மேகம்
6. கண் இக்ஷிமேகம்
7. சுக்ரமேகம்
8. கல்லுடைப்புமேகம்
9. இக்ஷாமேகம்
10. சுராமேகம்
11. சுக்ரமேகம்
12. சீதமேகம்
13. பாலாமேகம்
14. சுக்லமேகம்
15. கல்மேகம்
16. மதுமேகம்
17. சனிமேகம்

**மேக நோய்வகைகள்**

*வாதம் - 4*

1. திருகு கரப்பான்
2. தூயன்
3. தூயபிரமன்

சாத்தியமேகம்

4. மாஹ்கிச சுருக்கி

*பித்தம் - 6*

1. அப்பியம்
2. சாப்பிரமம்
3.
4. ஆமியம்
5. மதுப்பிரமம்
6. விருதம்

*கபம் - 10*

1. உத்தகன்
2. வித்தகன்
3. அக்கியன்
4. சுராரி
5. சுக்கிலன்
6. பிராட்டியன்
7. பேணானி
8. சணமயிலன்
9. லவணன்
10. தயித்தமேகம்

**யூகிமுனிவர்**

*வாதம் - 4*

*பித்தம் - 6*

1. நெய் மணநீர்
2. பசுமணநீர்
3. சீழ்நீர்
4. சனதநீர்

1. யானைக்கொழுப்பு நீர்
2. கற்றாழை நீர்
3. சுண்ணாமணநீர்
4. இனிப்பு மேகம்
5. பளிங்கு நீர்
6. முயற்குருதி நீர்

கபம் - 10

1. துய்யநீர்
2. தூய்மைநீர்
3. மூளைநீர்
4. இளநீர்
5. கள்நீர்
6. வெண்ணீர்
7. கழுநீர்
8. தேன்நீர்
9. உப்புநீர்
10. கவிச்சிநீர்

# AN APPEAL

Manuscripts on Palmleaf or Paper of the ancient works of the wise men of the past, are the great treasures, solely inherited by the Nation and it is the moral obligation of persons who possess them to preserve them safely for the future generations of mankind.

Probably you have some of these in your possession or you know friends or neighbours who possess them. You can make a great contribution to the cause of the preservation not only of our national Culture but also to the Culture of Humanity as a whole by arranging to present such manuscripts to the famous T.M.S.S.M.Library, Thanjavur.

The Manuscripts so presented will be accepted and acknowledged with pleasure and gratitude by the authorities of the Library, preserved with meticulous care and made available to succe -ssive generations of readers and scholars for study and research. The hitherto unpublished works found among them will be printed and published in due course, as facilities occur, with the expression of the Library's gratitude for your gift.

The great Scholar King of Tanjore, **Rajah Serfoji**, has attained immortal fame by dedicating enormous time and wealth to the expansion and firm establishment of this world famous **'Sarasvati Mahal'**. It is open to you to share the honour of Serfoji, in your own measure by contributing your manuscripts to the great institution built by him.

This great Honour is beckoning to you to accept it. Will you hasten to take it up? The Library waits for your answer.

**DISTRICT COLLECTOR AND DIRECTOR**
Sarasvati Mahal Library, Thanjavur.

# OUR PUBLICATIONS

## MEDICAL

| | | Rs. Ps. |
|---|---|---|
| 1. | Garbhini Balaroga Chikitsai | 45 - 00 |
| 2. | Jvara Roga Chikitsai | 50 - 00 |
| 3. | Nadi Vakadam | 150 - 00 |
| 4. | Padarthaguna Palporul Vilakkam | 150 - 00 |
| 5. | Pancha Kaviya Nigantu | 130 - 00 |
| 6. | Pitha Roga Chikitsai | 30 - 00 |
| 7. | Siddha Maruthuva Chudar | 200 - 00 |
| 8. | Soumiya Sagaram | 70 - 00 |
| 9. | Vata Roga Chikitsai | 60 - 00 |
| 10. | Vaidya Thirattu | 40 - 00 |

## JYOTHISAM

| | | |
|---|---|---|
| 11. | Jataka Sara Deepika | 125 - 00 |
| 12. | Sinendra Malai | 65 - 00 |
| 13. | Jatakachandrika | 40 - 00 |
| 14. | Purvaparacaryam | 150 - 00 |
| 15. | Varahar Ora Sastram | 150 - 00 |

## SANSKRIT

| | | |
|---|---|---|
| 16. | Bharatarnavam | 160 - 00 |
| 17. | Nyaya Kaustubham | 205 - 00 |
| 18. | Silpa Ratnam | 150 - 00 |

## MARATHI

| | | |
|---|---|---|
| 19. | Usha Parinaya Natakam | 35 - 00 |
| 20. | Rama Jannana Nirupanam | 20 - 00 |

## TAMIL

| | | |
|---|---|---|
| 21. | Malaiyaruvi | 125 - 00 |
| 22. | Prabodha Chandrodayam | 153 - 00 |
| 23. | Attruppadai Thokuti | 45 - 00 |
| 24. | Kunthamala | 40 - 00 |
| 25. | Padartha Saaram | 135 - 00 |